## பன்னிரண்டாவது

# பாரத்துவாசருக்குப் பிணிக்குத்தக்க ஓடதிகள்போதித்த காதை.



பிணியாளனெண்ணத்தை ஞானக்கண்ணினு லறிந்த வாருடர் பாரத்துவாசரைநோக்கி அன்பனே, நீவிர் அதிதுன்ப வியாதியி னுபாதையால் அனந்தநாள் அவத்தைப்படுகின்றீர்போலு மென்றார்.

அருகன் அருள்மொழியைக்கேட்ட பாரத்துவாசர் திடுக்கிட்டு ஐயிந்திரியங்களைவென்று அந்தரங்கமுணர்ந்த இந்திரரே எனதுள்ளத்திலெண்ணிய வெண்ணங்களை உமது களங்கமற்ற வுள்ளக்கண்ணாடியிற் கண்டுகொண்ட செவ்வியக் கண்ணனே, சிறந்த செல்வனே எனக்குற்ற வியாதியை எவ்வகையாற் றெரிந்துகொண்டீரோ அதன் நிவர்த்தியு முமக்குத் தெரிந்தேயிருக்கும். தேவரீர் அதன் உற்பவத்தையும், மடிவையும் விளக்கி யாட்கொள்ளவேண்டுமென்று வணங்கினான்.

பகவன் பாரத்துவாசரை நோக்கி அன்பனே! உமக்குள் ளெழும் ரஜோகுண, தமோகுண, சத்துவகுணமென்னு முக்குணத்திரய காம, வெகுளி, மயக்கங்களைக் காரணமாகக் கொண்டெழூஉம் முக் குற்றங்களை வாத, பித்த, சிலேத்துமமென்னும் மூவியாதி பீடமாகி வாதத்தால் ஆயிரத்தியைந்நூறுவகைத் தோற்றங்களும், பித்தத்தால் ஆயிரத்தியைந்நூற்றி நாற்பதுவகைத் தோற்றங்களும், சிலேத்துமத்தால் ஆயிரத்தி நானூற்றி யெட்டுவகைத் தோற்றங்களையு முண்டுசெய்து மக்களை மாளாதுன்பத்திற் காளாக்கி மடித்துவருகின்றது.

இத்தியாதி வியாதிகளின் தோற்றத்திற்கும், உபாதைக்கும் மக்கள் அவாக்களே காரணமாகும். அவற்றுள் காம அவாபெருக்கம், வெகுளிபெருக்கம், மயக்கபெருக்கத்தால் உமக்குத் தோன்றியுள்ள வியாதியின் பெருக்கமானது வெகுளியின் அதிகரிப்பினாலும், வேளைபுசிப்பின் தவறுதலினாலும் பித்த வனல மீறி மார்பின் குழியினுள்ளும், இரைப்பையின் முகப்பிலும், திரண்ட கட்டிபோல் வளர்ந்து புசிப்பின் அன்னத்திறக்கத் தடைகளையேற்று எட்டுவகை துன்பத்திற் காளாக்கி அஷ்டகுன்மக் கட்டிகளாக வளரும்.

அவ்வகை வளர்ந்து அன்னதுவேஷத்தால் ஒடுங்கியும், பித்தகோபமாம் வெகுளியொடுங்காது மேலு மேலுங் கோபத்தைப்பெருக்கிக்கொள்ளுவதால் குன்மமென்னுங் கட்டியும் வளர்ந்து துன்பமும் பெருக்கிக்கொண்டேவரும்.

வெகுளியாங் கோபத்தை யடக்கும் மூலிகை சத்துக்களையும், உபரச சத்துக்களையும், உப்பின் சத்துக்களையும புசித்து கோப மெழாவண்ணம் நசித்து சாந்தத்தைப் பெருக்குவதால் குன்மங்கள் கரைந்து துன்பமகன்று அன்னமுறைந்து உதிரஞ் சிறந்தோடி யுடல்குளிர்ந்து சுகத்தை யளிக்குமென்றார்.

பகவன் பரிகரிப்பாம் பரம வாக்கை யுணர்ந்த பாரத்துவாசர் அவரடிபணிந்து ஐயனே! திரிபீடமாம் மூவமுத வாக்களித்து மக்களை தேவர்களாக்கிய தேவாதிதேவா! இத்தேகவாயுவின் தீரத்தை தேறச்செய்பவும், வீரத்தை விலக்கிக் கலக்கவுமாகுங் கற்பத்தை யருள்புரியவேண்டுமென்றடிபணிந்தான்.

பகவன் பாரத்துவாசரைநோக்கி அன்பனே! மக்களுக்குள்ள கிரமச் செயல்களை சௌக்கிய மென்னப்படும். அக்கிரமச் செயல்களை வியாதி யென்னப்படும்.

இத்தகையவியாதிகள் ஏதுக்குத் தக்கநிகழ்ச்சியாய்த் தோன்றும், அத்தோற்றங்களுக்கு பூதபௌதிகங்களும், அவரவர் குணாகுணங்களும். செயல்களுமே காரணமாகும்.

மண், நீர், தீ, காற்று இவற்றின் மாறுதலின் செயல்களை முதல் மூலமாகும். குணக்கிரய அவாக்களை இரண்டா மூலமாகும். மனப் போக்கின் மீறியச் செயல்களை மூன்றாமூலமாகும்.

இம்மூவகையேதுவால் நிகழ்ச்சியாகும் சத்துவவிருத்தி, தமோவிருத்தி, இராசோவிருத்தியாகும் வாத, பித்த, சிலேத்தும வியாதிகளாகி நெய்தநில மக்களுக்கு வாதமே பீடமாகக்கொண்டும், குறிஞ்சிநில மக்களுக்கு பித்தமே பீடமாகக்கொண்டும், முல்லைநிலமக்களுக்கு சிலேத்துமமே பீடமாகக்கொண்டும், மருதநில மக்களுக்கு வாதத்திற் பித்தமே மூலமாகக்கொண்டும், பாலைநில மக்களுக்கு பித்தத்திற் சிலேத்துமமே மூலமாகக்கொண்டும் பற்பல வியாதிகள் தோன்றி மும்மெய் வினையின் பயன்களையும், இம்மெய் வினையின் பயன்களையும் அநுபவிக்கச் செய்கின்றது.

மக்கள் ஒவ்வொருவருக்கும் வினையுள்ளளவும் தேகமும், தேகமுள்ளளவும் வியாதியும் ஆதியாய் நின்று அலைக்கழிக்குமாரும்.

ஆதியாய வியாதிகளுக்கு அவ்டகமூலம் அறிவின் பெருக்கமேயாகும்.

அறிவின் விருத்தியால் ஒவ்வொரு மக்களுக்குள்ள உதிர விருத்தியே அயசம்மந்தமாகவும், மூளையின் விருத்தியே பொன் சம்மந்தமாகவும், மாமிஷ விருத்தியே வங்கசம்மந்தமாகவும், அஸ்தியின் விருத்தியே வெள்ளி சம்மந்தமாகவும், நரம்பின்விருத்தியே தாரவின் சம்மந்தமாகவும், தாம்பிரவிருத்தியே சரும சம்மந்தமாகவு முணர்ந்து அந்தந்த யாக்கையுருப்பின் குறைவு நிறைவுகளை அந்தந்த லோகங்களால் நிவர்த்திக்க வேண்டியது.

மூலிகைவர்க்கங்களிலுள்ள அயசம்மந்த தாபரங்களும், பொன் சம்மந்த தாபரங்களும், வெள்ளிசம்மந்த தாபரங்களும், வங்கசம்மந்ததாபரங்களும், தாரசம்மந்த தாபரங்களும், தாம்பிரசம்மந்ததாபரங்களும் இன்னின்னவைகளென்று கண்டறிந்து அவ்வவ் வுருப்பின் குறைவு நிறைவுகளுக்கு அந்தந்த மூலிகைகளைக் கொடுத்து நிவர்த்திக்கவேண்டியது,

உப்பின் வர்க்கங்களிலுமுள்ள அயச்சம்பந்த உப்புகளும், பொன் சம்மந்த உப்புகளும், வங்கசம்மந்த உப்புகளும், தாரசம்மந்த உப்புகளும் தாம்பிரசம்மந்த உப்புகளும் ஈதிதென்றறிந்து அந்தந்தவுருப்பின் குறைவு நிறைவுகளுக்கு அந்தந்த உப்பினங்களை யீய்ந்து நிவர்த்திக்கவேண்டியது.

* இரத்தின வர்க்கங்களிலு முள்ள அய சம்மந்த ரத்தினங்களும், பொன் சம்மந்த வைரங்களும், வெள்ளிசம்மந்த புஷ்பராகங்களும், வங்க சம்மந்த கோமேதகங்களும், தாரசம்மந்த நீலங்களும், தாம்பரசம்மந்த பசசைகளும் இன்னின்னவைகளென்றறிந்து அந்தந்தவுருப்பின் குறைவு நிறைவுகளுக்கு அந்தந்த ரத்தினங்களை யீய்ந்து நிவர்த்திக்கவேண்டியது.

பாஷாணவர்க்கங்களிலுமுள்ள அயசம்மந்த தொட்டி பாஷாணங்களும், பொன்சம்மந்த கௌரி பாஷாணங்களும், வெள்ளி சம்மந்த சங்கு பாஷாணங்களும், வங்க சம்மந்த தாளக பாஷாணங்களும், தார சம்மந்த வீரபாஷாணஙகளும், தாம்பிர சம்பந்த செப்புத்தொட்டி பாஷாணங்களும் யீதிதென்றறிந்து அந்தந்த உருப்பின் குறைவு நிறைவுகளுக்கு அந்தந்த பாஷாண அளவுளவின் சிகிச்சையால் தீர்த்தல்வேண்டும்.

இத்தகைய தேக குணகுணங்களையும், மூலிகை குணகுணங்களையும், உபரசகுணகுணங்களையும், நவரத்தின குணகுணங்களையும், உலோக குணகுணங்களையும், பாஷாணகுணகுணங்களையும் நன்காராய்ந்து அதனதன் சத்துருக்களைக் கண்டறிந்து முடிப்பதும் அதனதன்மித்துருக்களைக் கண்டறிந்து சேர்ப்பதுமாகிய அவுடதங்களை முடித்தல்வேண்டும்.

ஒவ்வோர் தேகத்திற்குள்ள திடத்தையும், சத்துவத்தையும் ஊட்டும் வஜீகரண அவுடதங்களையும், ஆயுள்விருத்திக்கு ஆதாரமாகும் இரசாயன அவுடதங்களையும், மூலிகைகளை தனது சத்துருக்களின் சேர்க்கையால் பாஷாணமாகுதலும். பாஷாணங்களை தனது சத்துருக்களின் சேர்க்கையால் அமுதமாவதும், குழந்தைகளின் வியாதிகளுக்குச் செய்யுஞ் சிகிட்சைகளை அதி ஜாக்கிரதையாகவும், கணபேத குணபேதங்களை யறிந்தும், மக்களுக் குண்டாகும் மனோ பீதியாலும், எண்ண பேதத்தாலும் உண்டாகும் பேயகிலே ரோகங்களையும், சரீரத்தை மாறுபடசசெய்யுங் காமரோகங்களையும், கழுத்திற்கு மேறபட்ட உாத்தவாத ரோகங்களையும், காய சிகிட்சை, இரண சிகிட்சையாகும் சல்லியரோகங்களையுந் தெரிந்துக் கொள்ளல்வேண்டும்.

இத்தியாதி தேக குணகுணங்களையும், வியாதியின் குணகுணங்களையும், அவுடத குணகுணஙகளையும் அறிந்துசெய்வதே சிகிட்சா சூஸ்ரதமாகும்.

அவற்றுள் உமக்குள்ள ரோகங்களைத் தெரிந்துக்கொள்ளவேண்டுமாயின் உமக்குள்ள குணச்செயல்களையும், காயச்செயல்களையுங் கண்டறி

அருங்கலைச்செப்பு.

* ஆசாரகப்பத்து.—ஊனு மென்பு மூதிரம் நரம்புதோல், காணுமெய் நோயின் திறை. அயம் வெள்ளி பொன்னு மருந்தாரங்கொண்டு, நியமி நோய்தாம்பிரத்தினேர். கௌரி வெண் தொட்டி தாளகம் வீரம், பௌரி பாடாணங்கள் பார் சிவப்பொடு நீலம் வைரமா பச்சை, உவப்புட்பராகமன் னேர். பாடாணத் துன்னும் பருங்கல்லி லுப்பிற், சேடான லோகஙகண் டோர். அயத்திற் குதிர மருமூளைப் பொன்னும், புயல் வங்க மப்புலேயே யாம். என்பதனுள்வெள்ளி யுரைநரம்ப தேதரா, தொன்னை தோற் றும்பிரமதாம். துன்பத்திரட்சி சினக்கோதுருண்டு, குன்மக் குடத்தியாங் கூர். சினமாற்றி நாளுஞ் செல்லன்னங் கொண்டு, வனவுப்பின் தூளம் பரி. இதயத்தி லுள்ள விடும்பைகள் நீங்கில், புதயற்ற துன்பம் படும்.

ந்து அவற்றுள் குணச்செயல்களாகும் ரஜோகுணவிருத்திகளையும், தமோ குண விருத்திகளையு மொடுக்கி காயச்செயல்களில் குன்மத்தை விருத்தி செய்யும இனிப்புள்ள பதார்த்தங்களாகும் பித்த சத்துக்களை யகற்றி நீத்தனவாதாரமாம் உப்பினப்பண்டங்களை உண்டுவருவீராயின் உருண்டரோகங் கரைந்து உண்ணும் புசிப்பும் பசந்து உதிரஞ் சிறந்து சுகமுறுவீரென்று முடித்தார்.

## மாதவன் வேணுவியாரத்தோருக்கு மதியூட்டிய விவரம்.

மாதவன் பின்னும்வேணுவியாரசங்கத்தோர்களைநோக்கி சிரமணர்களே! நாம்காலமெல்லாம் மெய்மொழிகள் யாதென்றுகேட்டுத்தெளியாமல் பொய்மொழிகளை நம்பி சமுத்திர அலைபோல் ஓய்வில்லா ஜெநநங்களாகிய பிறவி துக்கத்திற் சுழன்று அனேககாலமாக வல்லல்பட்டிருந்தோம்.

நாம் வாசஞ்செய்யு மிப்பூவுலகமே ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியாய் கருமத்திற் கேதுவாம் உரு திரண்டு உலகமென்று கூறுவதுள் சீவர்கள் செய்யும் செயல்களென்னுங் கருமங்களே ஒருகாலத்தில் மண்ணாகவும், மரங்களாகவும், புழுக்களாகவும், விலங்குகளாகவும், மட்சம், பட்சிகளாகவுந் தோன்றுகின்றன. அந்த கர்ம்மங்களென்னும் செயல்களே அநேக நற்செயல் தோற்றங்களாருண்டு முடிவில் புத்தராகின்றன.

ஆதலின் சீவர்களின் செய்கைகளையே கருமமென்று கூறப்படும். அக்கருமங்களின் பயனே சீவர்களாகின்றார்கள். முன் ஜெநநத்தின் கருமங்களே சீவர்களாக விருப்பதால் நமது கருமத்தின் பயனே இந்த ஜெநநத்தில் சீவர்களாகத் தோன்றியுள்ளோம்.

அநேக ஜெநநங்கள்தோருந் தோன்றிய சீவர்கள் மனிதவுருவத்தைப்பெற்று பகுத்தறிதலாகிய விவேகத்தை யடைந்துவருகின்றார்கள்.

இத்தகையப் பகுத்தறிவைப்பெற்ற அரிய மானிட ஜெநநத்திற்கு துக்கநிவர்த்தியாகிய ஞானத்தைப் பெற அநேக ஜெநநங்கள்தோரும் நற்கருமங்களை புரிந்திருக்கவேண்டியதாதலின் சத்கருமங்களே துக்கநிவர்த்திக்குக் காரணமாகும்.

இந்த திவ்விய மானிடதேகத்தைப்பெற்ற ததாகதன் துக்க நிவர்த்திக்குக்கொண்டுபோகும் மார்க்கத்தை கண்டுதெளிந்தேன். நீங்களு மம்மேறை சாந்தமும், சமாதானமும் அடையும்படியாக அந்த திவ்வியமார்க்கத்தைத் தெரிவித்தேன்.

தாகவிடாய்கொண்ட உங்களுக்கு அமுர்தமாகும் சத்தியமார்க்கத்தைக் கொடுத்தேன். அதை யருந்தினவன் கொலை, களவு, காமாதிகளினின்று நீங்கி சுகமடைவான். இராகத் துவேஷ மோகங்களாகிய வெள்ளத்தினின்று மீண்டு நிருவாணக்கரைச் சேர்ந்தவனுடைய துக்கமற்றச் செயலைக்காண்போர் யாவருந் திகைத்து நிற்பார்கள்.

அவ்வகை சத்தியமார்க்க வமுதை யருந்தினவன் உலகில் வாழ்ந்தும் நீரிலிருக்குந் தாமரைபோல் பற்றற்று வாழ்வான்.

சத்தியமார்க்கத்தில் நடப்பவன் உலகத்தோருடன் ஒக்கவாழினும் ஆசாபாசங்களிற் பற்றற்றிருப்பான்.

தன்னுயிரைப்பார்க்கினும் தன் யேகபுத்திர னுயிரைக்காக்குந் தாயைப்போல் மன்னுயிர்களின்பேரில் தன் அளவுபடா அன்பை செலுத்துவான்.

ஆதலின் ஒவ்வொரு மனுமகனும் நிற்கும்போதும், உலாவும்போதும், நித்திறைக்குப் போகும்போதும், விழிக்கும்போதும், மரணகாலத்தும் அன்பின்மயமா யிருக்கக்கடவன்.

இந்த மெய்மொழிகளை யுணராதவன் பகுத்தறிவற்றவனாவான். பகுத்தறிவில்லாதவன் அநேக ஜெநநங்களாய்ப் பிறந்திறந்து மாளா துக்கத்தி லாழ்வான். அறியாமெயாம் அந்தகாரத்தில் மூழ்குவான்.

* ஆனால் நாம் நமது பகுத்தறிவால் மெய்ம்மொழிகளைக் கண்டறிந்தோம். ஜெநநமரணத்தினின்று நீங்கினோம். நானென்னும் அகங்காரத்தை நசித்தோம். உண்மெ யறிந்தோம்.

இதுதான் சத்தியதன்ம பலன், இதுதான் சத்தியமுத்தி, இதுதான் சத்தியலோகம், இதுதான் சத்தியவாழ்க்கையென்று முடித்தார்.

† அக்காலோர் தன்மந்திரியென்னும் தனவந்தன் பாரத்துவாசரை யடுத்து தனக்குள்ள திரவியங்கள் யாவையுஞ் செலவிட்டு தேக குணகுணங்களையும், வியாதியின் குணகுணங்களையும், மூலிகைகளின் குணகுணங்களையும், உபரச குணகுணங்களையும், பாஷாண குணகுணங்களையும் நன்காராய்ந்து பகவனது வுத்திரவால் இந்திர வியாரங்களுக் கருகே வைத்தியசாலைகளை நிருமித்து ஏழைகளுக்குங் கனவான்களுக்கு முண்டாய வியாதிகளுக்குத் தக்க அவுடதங்களை யீய்ந்து சுகமுறச்செய்துவருங்கால் பாரத்துவாசரை யடுத்த தன்மந்திரிக்கு ஓர் மனமாறுதற் றோன்றி மாதவனிடஞ் சென்று பிடகபோதனெ சரகசூஸ்திரா உமது கருணையால் மனோ துக்கங்களை நீக்கும் பிடகபோதங்களையும், தேகவுபத்திரவங்களை நீக்கும் அவுடதங்களாம் சூசரக போதங்களையு மருளிச்செய்தீர்.

இத்தகைய போதகங்களால் மக்களுக்குள்ள மனோதுன்பங்களும், தேக துன்பங்களு மகன்று ஆறுதலடைந்துவருகின்றார்கள்.

ஆயினும் உம்மெய் நெருங்கிய வியாதியஸ்தர்களும், உமது பார்வைபெற்ற ரோகிகளும் சுகமடைகின்றார்களே அத்தகைய போதங்களை யிவ்வடியார்களுக் கருள்புரியலாகாதோவென் றடிபணிந்தான்.

அவற்றை வினவிய பகவன் பாரத்துவாசர் மாணாக்கனை நோக்கி தன்மந்திரி மனோரோகங்களை நீதிநெறி ஒழுக்கங்களாலும், தேக ரோகங்களை அவுடதப் பிரயோகங்களாலும் அவரவர்கள் தங்களுக்குத்தாங்களே யுணர்ந்தும் அவுடதங்களைத் தாங்களே யுண்டும் சுகமடைவதே கிரமமாகும்.

---

* பெரும்பொருள் விளக்கம்.—இளையர் முதியரென விருபால்பற்றி, விளையுமறிவென்ன வேண்டாம் - இளைஞரைய்த், தன்றுதைகாண நுகர்தற்குத் தன்காண, மொன்றாது நீத்தா னுளம்.

அருங்கலைச்செப்பு.

† தன்மந்திரியார்பத்து —பாரத்துவாசன்றன் மந்திரியாய் நின்றான், சிரத்த சுஞ்ஞானமுநி. உரபிடகமோதி யுலகநாதன்பாற், சரகமுந்தான் கற்றனேர். கற்றமருந்துங் கனவொழுக்கமுற்றுப், பற்றுங் குடிக்களித்தான் பார். வியாரங்கள் பக்கும் வியாதித்தருக்கும், நியாயங்க ளீய்ந்தா நெறி. முன்னறன்பாற்கண்ட மொழியை விளித்தான், பின்னறன்கைகண்ட நேர். மனச்சுத்தமுற்ற மக்கட் கனுகா, கனப்பித்த நோயின் குணம். உள்ளக் களங்க முடங்கி நிற்றல், விள்ளத் தொடரும் வினை. வினையனுகாதுற்ற விழியுங் காமுக், கினையனுகா நோயின் திரள். பாசங்க டோய்ந்த பகுதி யெதிர் பாச, நேசத் தொடரும்நெறி. விழியால் விலகுங் கையாற் கழியுந்,தொழிலாம் ஞானத் தொடர்.

அங்ஙனமின்றி ஓர் ஞானியினது விழிபட்டும், கைபட்டும் சுகமடைவார்களாயின் அதன் கிரகிப்பு சுத்த ஞானிகளை யாதொன்றுந் தீங்கு செய்யாது.

தங்களைப் பெரியோனென்று மதிக்கவும், தங்களை சகலரும் கொண்டாடவும்வேண்டிய சொற்ப பற்றுள்ள ஞானிகளை அவர்களுக்குள்ள தீவினைகள் பற்றிக்கொண்டு ஞானியுந் துன்பமடைவான். ஆதலின் அத்தகைய வானந்தத்தை மறந்தும் கருதாதிருப்பீராக வென்று மற்றுமுள்ள அவுடதப் பிரயோகங்களையும் விளக்கிவிட்டு மச்சநாடடைந்தார்.

தன்மந்திரியும் மற்றுந் தனக்குள்ள திரவியங்கள் யாவையுஞ் செலவிட்டு அவுடதப்பிரயோக தன்மஞ்செய்வதுடன் அறநெறியாம் நல்லொழுக்க தன்மங்களையு மூட்டிக்கொண்டுவந்தார்.

அக்காலத்தி லோர்வகைக் கொள்ளைநோய் தோன்றி அத்தேசவாசிகளில் அநேகர் மரணமடைந்தார்கள். அநேகர் திகிலடைந்தார்கள், அநேகர் மரண கிலேசமுற்று வருந்தினார்கள். அநேகர் பொய்ச்சந்தோஷங்கொண்டு எல்லோரையு மழைத்து இன்றைக்கு யாவற்றையும் அநுபவித்துவிடுவோம் இன்றைக்கிருப்பதும் நாளைக்கு மிருப்போமென்பதும் நிட்சயமில்லையென்று சொல்லிக்கொண்டு உள்ளுக்குள் திகிலடைந்தும் வெளிக்கு சந்தோஷமாகப் பேசிக்கொண்டார்கள்.

இவ்விதமாக அவ்வூர் ஆண் பெண் யாவரும் மரண பயத்துடன் கிலேசமுற்றிருக்குங்கால் பாத்துவாச தன்மந்திரியார் ஒருவர்மட்டிலும் வழக்கம்போல் மனவமைதியுடனும், சமாதானத்துடனும் வீடுவீடாய் நுழைந்து வியாதியஸ்தர்களுக்கு வேண மருந்தளித்துவருவதுடன் வேண்டிய தேறுதல்களையும் சொல்லிக்கொண்டுவந்தார்.

அக்காலத் தொருமனிதன் தன்னிடம்வந்து தனதுகுறைகளைக்கூறவாரம்பித்தான்.

அதாவது என்னுடைய வுள்ளம் பதைபதைக்கின்றது, மனந் தடுமாற்றமடைகின்றது, மக்கள் மரணமடைதலைப் பார்க்க சகிக்கக்கூடாதவனாயிருக்கின்றேன், எனக்கு இறப்புவருமாயின் யாதுசெய்வேன், அயலாரைப் பற்றிய அவசியம் ஒன்றுமில்லை, என் மரணத்தைப்பற்றிய கவலை கொண்டேன், எனக் குதவிபுரியீரா, என் கவலையை யொழிக்கமாட்டீரா, என்மரண பயத்தை நீக்கமாட்டீரா, மரணத்திறகு யென்செய்வேன் என்செய்வேனென் றலறினான்.

அவற்றை வினவிய தன்மந்திரியார் அவனை யருகிலுட்காரவைத்து அப்பா மரணபயத்தோனே! பிறர்மேற் பரிதாபமுடையோனுக்கு உதவியுண்டு. தன்மேல் அவாவுடையவனுக்கு வுதவிகிடையாது. பிறர் துக்கத்தைப்பார்த்து சகியாதவனுக்கு உதவியுண்டு. தன்துக்கத்தைப்பார்த்து சகியாதவனுக்கு உதவிகிடையாது.

கஷ்டகாலமே மக்கள் உள்ளத்தை சோதிக்கும், கஷ்டகாலமே மக்களை தன்மவழியிலும் நீதிமார்க்கத்திலும் செல்லவைக்கும்.

இக்காலத்தில் மக்கள் படும் துக்கக் காட்சியைக் கண்ணிற்கண்டும் உமது பேராசை ஒழியவில்லையல்லவா. தானென்னும் அகம்பாவம் நீங்கவில்லையா. உமது தாய்தங்கையர் பந்துமித்திரர்கள் படுந் துக்கக்காட்சிகளைக் கண்டிருந்தும் உனது அற்பசுகம் ஒழியவில்லையல்லவா. அவர்களுக்கு ஏற்பட்டுள்ள துக்கங்களை நீக்குவதற்குவுதவிபுரியாது உம்முடைய துக்கத்தை நீக்கிக்கொள்ள முயல்வதால் யாவருமமெயாதரிப்பார்கள்.

நீர் மற்றவர்களுக்குச் செய்த உபகாரத்தினாலேயே காக்கப்பட வேண்டியவராயிருக்கின்றீர். உமது அபகாரம் உம்மெய்க்காக்காது.

உட்கார்ந்திருந்தவனைப் பிணமாக நான்குபெயர் தூக்கிச்செல்லுவதையும், படுத்திருந்தவனைப் பிணமாக நான்குபெயர் தூக்கிச்செல்லுவதையும், நடந்திருந்தவனை பிணமாக நான்குபெயர் தூக்கிச்செல்லுவதையும் கண்டிருந்தும் நீர்கொண்டிருக்கும் அவாக்கள் உம்மெய் விட்டு நீங்கவில்லையல்லவா.

உன் மனை மாளிகைகளைப்பெருக்கிக்கொண்டதுபோல் உமது ஆயுளைப் பெருக்கிக்கொண்டீரா. உமது செல்வங்களைப் பெருக்கிக்கொண்டதுபோல் நீடிய வாழ்க்கையைப் பெருக்கிக்கொண்டீரா.

உமக்குள்ள அன்பை நீடிக்கச்செய்தும், உமக்குள்ள சாந்தத்தை நீடிக்கச்செய்தும், உமக்குள்ள ஈகையை நீடிக்கச்செய்து மிருப்பீராயின் உமக்குற்ற தீங்குகள் உம்மை யறியாமல் நீங்கும்.

அங்ஙனமின்றி மோகத்தைப் பெருக்கிக்கொண்டும், கோபத்தைப் பெருக்கிக்கொண்டும், உலோபத்தைப் பெருக்கிக்கொண்டும் உள்ள நீவிர் உமக்கு நேரிட்ட தீங்குகளை குறுககவேண்டுமென் றலைவதினால் ஒருக்காலு மத்தீங்குகள் அகலமாட்டாது.

துஷ்டனோடே துஷ்டனும், சுராபானப் பிரியனோடே சுராபானப் பிரியனும், வேசிக்கள்ளர்களுடன் வேசிக்கள்ளர்களும் சேர்ந்துக்கொண்டு தங்கள் தங்கள் கூட்டுரவைப பெருக்கிக்கொள்ளுவதுபோல் இராகத்துவேஷ மோகங்களைப் பெருக்கிக்கொண்டுள்ளவன் மேலுமேலு மக்கூட்டுரவைச் சேர்த்துக்கொண்டு தினேதினே துக்கத்தி லாழ்ந்திருப்பான்.

அத்துக்கங்களை யகற்றுவதற்கு ஒருவராலு முடியாது. அந்த துக்கங்களை யகற்றிக்கொள்ளவேண்டியவன் முன்பு தனக்குள்ள கோப மோக லோபங்களை யகற்றிக்கொண்டே வந்திருப்பானாயின் தனக்குத் தெரிந்துந் தெரியாமலும் நேரிட்ட துக்கம் தெரிந்துந் தெரியாமலு மகன்றுபோம்.

ததாகதர் உமக்கருளிய திவ்யபோதகத்தின்படி ஒவ்வொரு மனிதனின் தோற்றமும், ஒடுக்கமும், ஏதுவும், நிகழ்ச்சியும், சுகமும், துக்கமும், செல்வமும், தாரித்திரமும், நீடியவாயுளும், குறுகியவாயுளும், அவனவன் கருமத்திற் கீடாய் தேருருளைபோற் சுழன்றுவரும். அவர்கள் கன்மத்துக்கீடாய் ஓர் குடும்பமும் சுழன்றுவருகின்றது. ஓர் கிராமவாசிகளும் சுழன்றுவருகின்றார்கள். ஓர் தேசவாசிகளும் சுழன்றுவருகின்றார்கள் நான்கு பூதகன்மங்களின் செயலால் தேசங்களும் மாறுதலடைகின்றனவாதலின் நீர் உமது துக்கத்தை யகற்றவேண்டுமென்று கோருவது வீண்கோரிக்கையேயாகும்.

எது விஷயத்தில் பயமும், எது விஷயத்தில் துக்கமும் பெருகியுள்ளதென்று விசாரித்து பயத்திற்கான ஏதுவையும், துக்கத்திற்கான ஏதுவையும் உய்த்து நிதானிப்பீராயின் ஒருவர் உதவியுமின்றி தன்னிற்றானே தோன்றியுள்ள பயத்தையும், துக்கத்தையும்போக்கிக்கொள்ளுவீர்.

இவைகள் யாவற்றிற்கும் புத்தரின் அடைக்கலமே பெருநிதியாகும். அவரது தன்மமே அழியா பொக்கிஷமாகும். அவரது சங்கமே சதானந்தக் கூட்டமாகுமென்று உலகவாழ்க்கையையும், வீண்டம்பத்தை

யும் விளக்கி தக்காமூப்பேறனுக் காறுதல்கூறிச் சங்கத்தில் ஒருவனாகச் சேர்த்துவிட்டார்.

மாதவமறையோன் மச்சநாடடைந்து அவ்விடமுள்ள மக்களுக்கு அரிய தன்மத்தை வுபதேசித்துவருங்கால் மச்சனென்னும் ஓர் விவேகியார் வேதமுதல்வனை யடுத்து உலகத்தில் மெய்ஞ்ஞான சுடர்விளக்காக விளங்கும் உத்தமனே, அன்பே யோருருவாகவந்த அருகனே, சகலருஞ் சாற்றிக்கொண்டாடுதற்குரிய சாத்தனே, சாந்தமே ஒருருவாகத் தோன்றிய சதுர்முகனே, யீகையே யோருருவென வமைந்தவீசனே! தன்னுயிர்க்கிரங்காது பிறவுயிர்க்கிரங்கும் பிரமமே இவ்வடியேனையுந் தங்கட் சங்கத்தி லொருவனாகச் சேர்த்து யீடேற்றவேண்டுமென் றடி பணிந்தான்.

அக்கா லருகன் மச்சனை நோக்கி அப்பா மச்சனே! நீவி ரில்லறத்தைவிட்டு முனிந்து துறவறமாம் சத்தியசங்கத்தைச் சாரவேண்டுமென்னுங் கோறிக்கை கொண்டபடியால் உமக்குள்ள வசத்தியங்களாகும் அநித்திய தோற்றங்கள் யாவையு மறந்து சத்தியமாகும் நித்தியமொன்றென்று தெளிந்து நீடிய ஜாக்கிரதையி லிருத்தல்வேண்டும்.

அங்ஙனமின்றி இல்லற வின்பமும் வேண்டும், துறவற டம்பமும் வேண்டுமென்று முநிவீராயின் உன்மத்தர்போலும், பாலர்போலுந் திகைத்து உப்பு சாரமற்றுவிட்டதுபோல் உலகத்தோருக்கு ஓர் பிரயோசனமு மற்றவராய்விடுவீர்.

நீவி ரெடுக்கு முயற்சியும், உமது அதி தீவரபக்குவமும், சதா ஜாக்கிரதையிலும், சதாவிழிப்பிலுமிருந்து இராவுபகலற்றவிடத்தில் நிலைப்பீராயின் உலகிற் றோன்றியுள்ள சருவ சீவர்களுக்கும் உதவியோராயிருந்து உள்ள சீவர்களையும் உத்தமர்களாக்கிவைப்பீர்.

அவர்களடைந்த வுத்தமநிலையால் மற்றுமுள்ள மத்திம ரதமர்களையுஞ் சீர்திருத்தி செவ்வனே விளங்கவைப்பார்களென்றார்.

மச்சனார் மாதவனை வணங்கி ஐயனே! சருவசீவர்களும் இராவுபகலற்ற நிலைக்குவரக்கூடுமோவென்றார்.

மச்சனே! நீவிரிதுமட்டிலும் இல்லற வின்பத்தையே பேரின்பமாகக் கருதி மச்சனென்னுந் தனிப்பெயரினின்றீர். தற்காலமோ இல்லற வின்பத்தைமறந்து துறவற வின்பத்தில் முனிந்தீர். அத்தகைய முனிவைக்கொண்டு அதன்நிவாரகாரியத்தால் மச்சனென்னும் பெயருடன் மச்சமுனியென்னுங் காரணப்பெயர் தோன்றும்.

அதுபோல் எக்காலுமுள்ள பூமியினின்று ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியால் முதற்றோற்றமாம் புறபூண்டுகள் தோன்றி, புற்பூண்டுகளினின்று இரண்டாந் தோற்றமாம் புழுக்கீடாதிகள் தோன்றி, புழுக் கீடாதிகளினின்று மூன்றாந் தோற்றமாம் மட்சம் பட்சிகள் தோன்றி, மட்சம் பட்சிகளினின்று நான்காவது தோற்றமாம் ஊர்வனங்கள் தோன்றி, ஊர்வனங்களினின்று ஐந்தாவது தோற்றமாம் விலங்குகள் தோன்றி. விலங்குகளாம் வானரரினின்று ஆறாவது தோற்றமாம் வாலற்ற நரர்களென்னும் மக்கள் தோன்றி, மக்களினின்று மானிகளாய் ஏழாவது தோற்றமாம் இராவுபகலற்ற விடத்தினின்று தேவர்களாகத் தோன்றி சருவசீவர்களுக்கும் உபகாரிகளாக விளங்குவார்களென்று கூறினார்.

* அவற்றை வினவிய * மச்சன் சீவாசிகளை அதனதன் நற்கருமத்தால் உயர்ந்து மனுக்களாகத் தோன்றி, மனுக்களின் நற்கரும விவேகவிருத்தியால் இரவுபகலற்றவிடஞ் சென்று தேவர்களென்னும் பெயர்பெறுவதாக வுணர்ந்து உள்ளமுடையானை வணங்கி ஒப்பிலா யெமதப்பனே தாம் கூறியுள்ள இரவுபகலற்றவிட மெங்குளது அதனைச் சேரவேண்டிய வழி யெவை அவற்றை விளக்கி யாட்கொள்ள வேண்டுமென் றடிபணிந்தான்.

அவலோகிதர் அவனது விசாரிணைக் கன்புகூர்ந்து மச்சனே! நீவிருலகத்தோடு உருண்டுவருகின்றீர். அதாவது உலகம் சனியால் இருளும்போது தாமும் இருண்டு நித்திரையால் மூடிக்கொள்ளுகின்றீர். உலகம் பகலவனும் சூரியனாற் பிரகாசிக்கும்போது தாமும் நித்திரையை நீக்கி விழிக்கின்றீர்.

இத்தகைய இறப்பும் பிறப்புமாகும் விழிப்பும் நித்திரையும் பெருகி பெருநித்திரை யடைந்துவிடுவீராயின் மாறு பிறப்பிறப்பிற் காளாகி மங்கா துக்கத்தை யனுபவிப்பீர்.

ஆதலின் உம்மெய்க்கப்புறப்பட்ட வஸ்து ஏதோவொன் றிருக்கின்றதென்றும், உம்மாற் காணாதவஸ்து வொன்றிருக்கின்றதென்றும், வுள்ளங்கலங்காது உம்மெய்யாம் நிலம், நீர், தீ, காற்றாலாயவுருவமும் உணர்ச்சி எண்ணமென்னும் நாமமுமாகிய விரண்டினமே உம்மெய் யாட்டுவதும் ஓட்டுவதும், கார்ப்பதும், தூர்ப்பதும், போஷிப்பதும், தூஷிப்பதுமா யிருக்கின்றபடியால் எண்ணத்தாலாயப் பேராசையின் கேடுகளையும், உணர்ச்சியினாலாய வின்பத்தின் கேடுகளையும் நன்காராய்ந்து பார்ப்பீரானால் இம்மெய், மறுமெய் என்னுந் தோற்றங்களும், சுகம் துக்க மென்னும் நுகர்வுகளும், வேண்டுதல் வேண்டாமெனும் அவாக்களும், இரவு பகலென்னுங் காலங்களும் எளிதில்விளங்கும்.

அதாவது.—இருளவன் மறைக்குங்கால் நித்திரை சுகத்தை நாடுதலும், பகலவனுதிக்குங்கால் புசிப்பின சுகத்தை நாடுதலுமாகியச் செயலினின்று விடுபட்டு சதாவிழிப்பாம் ஜாக்கிரதையினின்று உலகவாழ்க்கையின் சுகத்தால் உண்டாகுங் கேடுகள் யாவையும் கண்டறிந்து எண்ணும் பீடத்தில் தீங்கான வெண்ணங்களைத் தங்கவிடாம லகற்றியும், சிற்றின்பவுணர்ச்சியில சுகிக்காமலகன்றும் இரவு தோன்றியதென்னும் எண்ணமும், பகல் தோன்றியதென்னும் உணர்ச்சியும் அற்று நிற்பீராயின் இரவுபகலற்றவிடந் தோன்றும். உமது இதயமாகிய கண்ணாடியிற் பதிந்திருந்த காமவெகுளி மயக்கங்களாகும் அழுக்குகள் யாவு மகன்று இதயகண்ணாடி பளிங்குபோல் பிரகாசிக்கும். அப்பிரகாசநிலையில் பலதேசங்களு முடக்

---

* மச்சமுனி யென்னூறு.—செய்வதற்கு செப்புகிறேன் கருவைக்கேளு, செகத்தழைக்க வுண்டான செடிபூண்டெல்லாங் கொய்துதந்து வேலைகளாடு பிடுகவிலக்கி, குருவருளால் மந்திரத்தாற் கொடுத்துப்பாரு, செய்வதற்கு வோடமிட்ட வயணம்போலே, செறிகின்றால் சகலசித்தும் நிலைக்கும்பாரு, வுய்வதற்கு வழிபாரு பொய் பேசாதே, ஒருநாளுங் குருமொழியை மறந்திடாதே. மறந்திடா மறைகுலத்தி லுபயதந்திரம், மச்சனென போதற்கு முன்புயானும், பிறந்திருந்த வெண்தேசம் மச்சதேசம், பிரமனுக்கு தொண்டுசெய்து பிறகு தானும், அறந்தழைக்க வோதிவைத்தார் வித்தையெல்லாம், அவருடைய புண்ணியத்தால் வரையிலேறி, நிறைந்த சித்தர் ஆச்சிரமந் தன்னிற் சேர்ந்து, நிட்டையிலே யிருந்துருகு நிலைகண்டேனே.

தன் தோற்றுவதன்றி பற்பல சீவராசிகளின் எண்ணங்களும் உடன்றோன் றியங்கும்.

அன்றுமுதல் நன்றாய்த் தூங்கினேன், நன்றாய் விழித்தேனென் னும சுகசொற்களுமற்று தூக்கமில்லாது வாதை யடைந்தேன், விழிக்கக் கூடாத பயக்கத்தி லாழ்ந்தேனென்னுந் துக்கசொற்களுமற்று இரவுபக லென்னுங் காலனைச் செயித்துக்கொள்ளுவீர்.

காலனென்னும் மரணகால ஜெயமுண்டானபோது இறப்பு பிறப் பென்னும் இரண்டற்ற நிருவாணம் பெறுவீரென்று போதித்து அந்த மச் சநாட்டின் வியாரமொன்று கட்டுவித்து * மச்சமுநிவரையும் தன்மப்பிரியர்க ளாம் சமணமுநிவர்களையு மவற்றுள் நிலைக்கச்செய்து அவரவர்கள் இதயங் களிலுள்ள சங்கைகள் யாவையும் நிவர்த்திச்செய்துக்கொண்டிருந்தார்.

சங்கறநிறைமியோனாகும் அவலோகிதர் மச்சவியாரத்தினின்று குணா பாடம், இரணாபாடங்களாம் சூசாகங்களை விளக்கிப் பேதகனியாதிபி னுபத்தி ரவங்களை நீக்கு முபாயங்களை யருளியதினால் அவரை உலகைவெதியோவெ ன்றும், வைதிபகாதனென்றுங் கொண்டாடிவந்தார்கள்.

அநுகூலச்செப்பு.

* மச்சபாத்து.—மச்சநாடன்றன் மனவிருளகற்றி இச்சையீனென்றுனிறை. இச்சையாலுண்டா மிடுக்கங்கள்யாவும், முச்செய் வினையென்றறி. வினையின் செயலே வெளிவுருதோன்றி, முநியும் மூாக்கனென் றுணர். சினமும் அமைதியும் செய்தொழில் யாவும், உனதுணரெண்ணமதாம் சுகமதை நாடி சுகிக்க விருத்தல், இகநிலை துக்கத்தொடர்.



## பதின்மூன்றாவது

# விசாகா காதை.



அக்கால் கோசலமென்னும் அயோத்தியாபுரியின் உள்நாடாகும் ஷராவஸ்தியில் மிகாரா வென்னும் ஓர் தனவந்தனிருந்தான்.

அவனுக்குப் புண்ணியவர்த்தன னென்னும் ஓர் புத்திரனுண்டு அவன் பாலதானமாம் பதினாறு வயது கடந்து குமாரதான முண்டாயதால் வதுவைக் கேதுசெய்து தாயுந் தந்தையருங் கூடி மைந்தனை யழைத்து மகனே உனது கண்ணுக்கு ரம்மியமானபெண்ணை நியமித்துக்கொள்ளலா மென்றார்கள்.

அவற்றை வினவிய புண்ணியவர்த்தனன் தாய்தந்தையரை விளித்து அவ்வகை யெண்ணத்தை யான் கொள்ளவில்லையே யென்றான்.

தாய்தந்தையர் மைந்தனை விளித்து அப்பா காலங்கடக்குமாயின் சந்ததி யற்றுப்போம்; உன் வதுவைக்கு இதுவே காலமென்றார்கள்.

அவர்கள் வார்த்தையை வினவிய மைந்தன் வேண்டாமென்று மாறுத்திரங்கூறாது உங்கள் மனோயிஷ்டப்படி யாகட்டும். அப்பெண் பஞ்சலட்சண மமைந்திருப்பாளாயின் அவளை மணஞ்செய்வதே மங்கல மென்றான்.

தந்தை தாயர் மைந்தனைநோக்கி மகனே! பஞ்சலட்சணமென்ப தெவை யென்றார்கள். மங்கை பருவ மான்துளிர் மேனியழகு, ஒடுங்கிய உடலழகு, மயிரழகு, பல்லழகு, சந்திரவதன ஒளியழகுமே யென்றான்.

அவற்றை யுணர்ந்த தாய்தந்தையர் நிமித்தகர்களை வரவழைத்து பஞ்சலட்சண மமைந்த பெண்கள் உலகத்திலுண்டோ வென்றார்கள்.

பஞ்சலட்சண மமைந்த பெண்களுண்டு ஆனால் தேடிகண்டுபிடிக்க வேண்டுமென்றார்கள்.

தனபதி தக்கமதியூகிகளாகும் நிமித்தகர்களைவரவழைத்து வேண பரிசளித்து சிறந்த மோகனமாலை யொன்றை யவர்களிடங்கொடுத்து பஞ்சலட்சணமமைந்த மங்கை தோற்றுவாளாயின் அவள் கழுத்தி லிம்மாலையை யணிந்துவாருங்கோளென் றனுப்பினான்

நிமித்தகர்கள் தனபதியின் உத்திரவைப பெற்று பலதேசங்களுக்குச்சென்றும் பஞ்சலட்சணப் பெண் தோற்றாமல் மிக்க துன்புற்று மெலிந்து வரும்வழியில் சகிதா வென்னும் நகரத்தை யடைந்தார்கள்.

அந்நாள் அந்நகரவாசிகளுக்கு சகிதா வென்னும் முல்லைபுட்பவிழா கொண்டாடும் மங்கையர் நாளாயிருந்தது.

அதனைக் கொண்டாடுமாறு மங்கைபருவப் பெண்கள் யாவரும் முல்லை புட்பங்களை தட்டுகளில் நிறப்பிவந்து முல்லை செண்டுகள் செய்தாடுவதும், முல்லைபாடல் பாடுவதுமாக ஆற்றங்கரையை யணுகி ஆனந்த நீராடி ஒருவர்மே லொருவர் புட்ப மிரைத்துக்கொண்டிருந்தார்கள்.

முல்லை கொண்டாட்டத்தைக் கண்ட நிமித்தகர்கள் யாவரும் அங்குள்ள ஓர் சத்திரத்தி லுட்கார்ந்து முல்லைவிழாப் பெண்களுள் பஞ்சலட்சணமமைந்தப் பெண் யேதேனு முண்டோவென்று கண்ணோக்கமுற்றிருந்தார்கள்.

அக்கால் மழைப்பெய்ய வாரம்பித்தது. பெண்கள் யாவரும் ஓடிவந்து சத்திரத்திற் சேர்ந்துவிட்டார்கள். விசாகா வென்னு மங்கைமட்டிலும் மெதுவில் நடந்து சத்திரம் வந்துசேர்ந்தாள்.

அக்காலத்தில் சத்திரத்தில்வீற்றிருந்தநிமித்தகர்கள்யாவரும் விசாகாவுக்குள்ள நான்கு லட்சணங்கள் சரிவாயிருப்பதைக் கண்டு பல்லின்லட்சணத்தை காணுதவர்களாய் விசாகாவைநோக்கி அம்மே! உம்முடனிருந்தப் பெண்கள் யாவரும் அதிகம் நனையாமல் ஓடிவந்துவிட்டார்களே அதுபோல் நீயும் ஓடிவந்துவிட்டால் உனது வஸ்திரம் அதிகம் நனையாதன்றோ வென்றார்கள்.

விசாகா நிமித்தகர்களைநோக்கிப் பெரியோர்களே! நான் அவர்களினும் ஓட சக்தியுள்ளவளே ஆயினும் சிலகாரணங்களையுணர்ந்து ஓடாமல் நடந்துவந்தேனென்றாள்.

அன்புமிகுந்த குழந்தாய்! அதன் காரணங்க ளென்னை யென்றார்கள்.

பெரியோர்களே! ஓடுவதினால் நான்குவகை கௌரவப்பழுதுண்டு.

அதாவது, இராஜகோலங்கொண்டவரசன் ஓடுவானாயின் அவனைக் கண்டோர் மதியார்கள். அலங்காரஞ்செய்துள்ள பட்டத்துயானை ஓடுமாயின் அதனைக் கண்டோர் மதியார்கள். பற்றற்ற ஞானியோடுவானேயாயின் அவனைக் கண்டோர் மதியார்கள். கற்புடையப் பெண்கள் ஓடுவார்களேயாயின் அவர்களைக் கண்டோர்களும் மதியார்கள்.

மற்றும் ஓடுவதினால் இன்னோர் குறைவுமுண்டு. எங்கள் தாய்தந்தையர்களால் நாங்கள் விலையாகும் பெண்கள் ஒவ்வோ ரவயவங்களையும் விலைமதித்து வைத்திருக்கின்றார்கள்.

அதிலொன்று ஓடுவதினாலும், ஆடுவதினாலும் பழுதடையுமாயின் ஒருவரும் எங்களை விவாகத்திற்குவிரும்பமாட்டார்கள். இதுதான் நான் ஓடாததற்கு மற்றொரு காரணமென்றாள்.

விசாகா பேசிக்கொண்டிருந்த நேரமெல்லாம் அவள் பற்களினழகைப் பார்த்தும் அவளது புத்தியின் விருத்தியை யறிந்தும் இத்தகைய லட்சணமுள்ள மங்கையை இதுவரையிலுங் கண்டதில்லையென்றெண்ணி அவளைப்புகழ்ந்து அவளது கழுத்தில் தங்கள் கரத்திருந்த மோகனமாலையை யணிந்து குழந்தாய்! உம்மால் இம்மாலை அழகுபெற்றதென்றார்கள்.

விசாகா இதைக்கேட்டு பெரியோர்களே! தாங்க ளெவ்விடமிருந்துவந்தீர்களென்றாள்.

குழந்தாய்! ஷ்ராவஸ்தியிலிருந்து வந்தோமென்றார்கள்.

தங்க ளதிபதியின் பெயரென்னையென்றாள்.

குழந்தாய்! அவர் பெயர் மிகாரா தனபதியென்றார்கள்.

பெரியோர்களே! எமதையன்பெய ரென்னையென்றாள்.

குழந்தாய்! உமதையன் பெயர் புண்ணியவர்த்தன சிறுவனென்றார்கள்.

மாலை சூடப்பட்ட விசாகா நடந்தவர்த்தமானங்கள் யாவற்றையுந் தனது தாய்தந்தையர்களுக் கறிவித்தாள்.

மாலைசூட்டப்பட்டபெண்கள் யாவரும் மாலைக்குரியவன் மனையைச் சேரவேண்டியது வழக்கமாதலின் அதுபோல் விசாகாவும ஐஞ்நூறு தேர்களில் தோழிகளுடனும், நிமித்தகர்களுடனும், சிலபெரியோர்களுடனும் பிரயாணத்திற் காயத்தமானபோது விசாகாவின்தந்தை நிமித்தகர்களைநோக்கி தாங்க ளெவ்விடமிருந்து வந்தீர்களென்றான்.

தனபதி யாங்கள் ஷ்ராவஸ்தி நகரத்திலிருந்து வந்தோ மென்றார்கள்.

அந்நகர தனபதியின் பெயரென்னை யென்றான்.

மிகாரா தனபதி யென்றார்கள்.

அவரது புத்திரன்பெய ரென்னையென்றான்.

புண்ணியவர்த்தன சிறுவனென்றார்கள்.

தங்கள் தனபதியின் செல்வமதிப்பென்னை யென்றான்.

தனபதி நாற்பதுகோடிக் காகுமென்றார்கள்.

அஃது எமது செல்வத்திற்கோர் திரணமாகாது. ஆயினும் என் குமாரத்தி காலதேச வழக்கத்தையும் விவாகக் குறிப்பையு மொட்டி எப்போது மாலைசூட்டப்பட்டாளோ அப்போதே ஒருவனுக்குத் துணைவியாகிவிட்டாள். இனி செல்வத்தைப்பற்றி யோசிப்பதில் யாதுபயனுமில்லையென்று சம்மதித்துக்கொண்டான்.

விசாகாளுக்கு மாலையணிந்த நிமித்தகர்கள் யாவரும் முன்பு சென்று வர்த்தமானங்கள் யாவற்றையும் மிகாரா தனபதிக்கு விளக்கியபோது மிகாரா தனபதி சாகிதநகரவாசியாகும் தனஞ்சய தனபதியிடம் வந்து சேர்ந்து தனது மருமகளை அழைத்துப்போகும்படி யாரம்பித்தான்.

அக்கால் தனஞ்சய தனபதி தனது மகளை திவ்யாபரணங்களால் அலங்கரித்து தேர், ஒட்டகம், குதிரை, யானை முதலிய ஸ்ரீதனங்க ளளித்து தனது மகளை யருகிலழைத்து குழந்தாய்! உனது கணவன் வீட்டிற்குச் சென்றவுடன் நீ நடந்துகொள்ள வேண்டிய ஒழுக்கங்கள் சிலதுண்டு.

அவை யாதெனில்:—உன் மாமனார்வீட்டிலிருக்கும்வரையில் வீட்டின் நெருப்பு வெளியிற் போகலாகாது, வெளி நெருப்பு வீட்டிற்கு வரலாகாது. கொடுப்பவனுக்குக் கொடு, கொடாதவனுக்குங் கொடாதே, கொடுத்தவனுக்குங் கொடாதவனுக்குங் கொடு, சுகத்துடன் உட்காரு, சுகத்துடன் உண்ணு, சுகத்துடன் நித்திரைசெய், அக்கினியைக் கவனி, வீட்டு தேவதைகளை விசுவாசி யென்று பத்து தனமதிகளையு மளித்தான்.

விசாகா யித்தியாதி சம்பத்துகளையும் பெற்றுக்கொண்டு தனது மாமனார் மிகாரா தனபதியும் மற்றுமுள்ளோரும் புடைசூழ ஷ்ராவஸ்தி நகரத்தை நோக்கிச சென்றார்கள்.

மிகாரா தனபதி தனதுபின்னால்வருங் கூட்டங்களைக்கண்டு இவர்களெல்லோரும் யாரென்று வினவினான்.

"உமது மருமகளின் தோழிப்பெண்களும் ஏவலாளருமென்றார்கள்."

அதனை வினவிய மிகாரா தனபதி மறுண்டு இத்தனையர்களை வைத்துக்கொண்டு யாரால் போஷிக்கக்கூடுமே? இவர்கள் யாவரையும் அடித்துத் துறத்திவிடுங்கோளென்று ஆக்கியாபித்தான்.

அவர்களுடைய வேவுகர்கள் துறத்துங்கால் விசாகா தடுத்தும் அதனைக் கவனியாது துறத்தியதால் ஓடியவர்கள் போக சிலர் பின்தொடர்ந்து வந்தார்கள்.

விசாகா தனது மாமனாரில்லஞ் சேர்ந்தவுடன் தனக்களித்திருந்த இஸ்திரீதனங்கள்யாவற்றையும் பங்கிட்டு தனதுசுற்றத்தாருக்கு வந்தனத்துடன் அநுப்பிவிட்டாள்.

காரணம் அந்த ஸ்திரீதனங்கள் யாவும் தன்சேவலாளர் போஷிப்புக்கென்றே கொண்டுவந்ததாதலின் அவர்கள் யாவருந் துறத்தப்பட்டபோது இனி யாரைப் போஷிப்போமெனக் கருதி தனதில்லத்திற்கே திருப்பிவிட்டு தன்மாமனார் குணகுணங்களைக் கேட்டப் பணிப்பெண்களுக்கு விஷயங்களை விளங்கப்போதித்தாள்.

அதாவது தோழிகளா! எனது மாமனார் தனத்தை சேகரிக்குந் தொழிலாளரே யன்றி அநுபவிக்குஞ் சுகவாள றன்றென்று விளங்குகின்றது.

எவ்வகையிலென்பீரேல், பூர்வபுண்ணியபலத்தால் தனவிருத்தியடைவதியல்பாகும். அத்தகைய தனத்தால் தானும் சுகித்து தன்னையடுத்தோரையுஞ் சுகிக்கச்செய்தல் தனபதிகளினியல்பாம். அங்ஙனமின்றி குப்பையைக் கொல்லையிற் சேர்ப்பதுபோல் செல்வத்தை யில்லத்திற் சேர்த்துவைப்பவர்களை தனபதிகளென்றுங் குணபதிகளென்றுங் கூறலாகாது. ஆதலின் எனது இஸ்திரீதனத்தையும் மாமனாற் குப்பையிற் சேர்க்காது சகலருக்கும் உபகாரியாக விளங்குந் தனபதிகளிடமே அநுப்பிவிட்டேனென்றாள்.

மணமகளில்லஞ் சேர்ந்து நிமித்கர்களால் வதுவை நிறைவேறியவன்றிரவு தனக்கு இஸ்திரீதனமாக வந்தப் பெண்குதிரை குட்டியீன்றதை வேவுகர்களாலறிந்து அவ்விடஞ்சென்று கொட்டாரத்திலுள்ளக் குதிரையையும் அதன் குட்டியையும் பார்வையிட்டு வேவுகர்களால் வேணவுபசரிப்புச் செய்து ஆதாரமளித்துவந்தாள்.

சிலகாலங்களுக்குப்பின் காலைநேரத்தில் சமணமுனிவரொருவர் பிச்சாபாத்திரமேந்தியிருந்த பெரியோனை கவனியாமலும், அன்னமளிக்கும்படி உத்தரவுகொடாமலுமிருக்க தனது மாமனாரின் லோபத்துவமுணர்ந்த விசாகா மனவருத்தமுற்று தென்புலத்தோர்க் கீயா தனமிருந்தென்ன போயென்ன குறைந்தென்ன மிகுந்தென்னவென்று சொல்லிக்கொண்டே மனைக்குள் போய்விட்டாள்.

அதனைக் கேட்டிருந்த மிகாரா தனபதிக்கு கோபமீண்டு வேவுகர்களை யழைத்து இந்தப்பெண் எனது மனைக்குள்வந்து சிறிது நாளைக்கெல்லாம் என் தனம இருந்தென்ன போயென்ன வென்னும் சாபமிடுகின்றாள் உடனே என் இல்லத்தைவிட்டு இவளை அகற்றிவிடவேண்டுமெனக் கூச்சலிட்டான்.

அவ்விடமிருந்த வேவுகர்கள் யாவரும் விசாகாவின் ஆட்களாதலின் அம்மொழியைக் கவனிக்காமல் மௌனமா யிருந்தார்கள்.

அக்கொடுமொழியைவினவிய விசாகா தனது மாமனாரை நோக்கி, ஐயனே! என்னைத் தெருவிலிருந்துக்கொண்டு வந்ததுபோல் வார்த்தையாடிவிட்டீர், என்னை வெளியிற்றுரத்தும்படியான அவக்கேடுகள் யான் செய்ததென்னை, அவற்றை விளக்கவேண்டுமென்று கேட்டாள்.

மிகாரா தனபதி நானவற்றை விளக்கவேண்டிய அவசியமில்லை யென்றான்.

விசாகா மறுபடியும் மாமனாரைநோக்கி ஐயனே! காகதாளிநியாயம் வேண்டாம். என்னுடன் வந்துள்ள எட்டுக்கிரகஸ்தர்களையும் வைத்து விசாரிப்பதே நலமென்று வேண்டி தன்னுடன் வந்த யெட்டுக்கிரகஸ்தர்களையும் வரவழைத்தாள்.

மிகாராவும் தனது கிரகஸ்தர்களை வரவழைத்தபோது இருவருங் கலந்து உழ்க்கார்ந்தார்கள். விசாகா இருகட்சி பெரியோர்களை வணங்கி ஐயன்மின்! எனது மாமனார் வாய்ச்சுளுவாக என்னை வீட்டைவிட்டுப் போகும்படி சொல்லுகின்றார். அதைத் தாங்கள் தீரவிசாரித்து என்னை யனுப்பிவிடவேண்டுமென்று வணங்கினாள்.

அதனை வினவிய மத்தியர்கள் தனபதியைநோக்கி யாது காரணமென்றார்கள்,

"என் தனத்தை, குறைந்ததென்ன மிருந்ததென்னவென்று சபித்தாள் அதினால் துறத்தும்படி சொன்னேனென்றான்."

பெரியோர்கள் விசாகாவைநோக்கி அம்மே! காரணம் யாதென்றார்கள்.

"தென்புலத்தோர் பாத்திரமேந்தி வாயல்படியில் வந்துநின்றதும் தன் மாமனார் அவரைப்பார்த்தும் பார்த்ததுபோல் புசித்திருந்ததுகண்டு அவ்வாக்கியம் புகன்றது மெய்யேயென்று கூறினாள்."

அதனை வினவியப் பெரியோர் தனபதியைநோக்கி ஐயா! இவ்வரு மொழிக்கு எமது குழந்தையை வெளியேகும்படி சொல்லலாமோ வென்றார்கள்.

அதனைவினவிய மிகாரா பெரியோர்களைநோக்கி இரவு நடுஜாமத்தில் உங்கள் குழந்தை வெளியிற் போகலாமோ வென்றான்.

பெரியோர்கள் விசாகாவை நோக்கி அம்மே! ஜாமத்தில் வெளியேறிய காரணமென்ன வென்றார்கள்.

தனது பெண்குதிரை குட்டி யீன்றதும் வேவுகர்களால் சங்கதி தெரிந்து அவ்விடஞ்சென்று குதிரைக்கு சிகிட்சைசெய்ததும் விளக்கினாள்.

அதனை வினவிய பெரியோர்கள் தனபதி! யாதுதோஷமுங் காணவில்லையே யென்றார்கள்.

மிகாரா தனபதி பெரியோர்களை நோக்கி மருமகள் செய்வது வோர் வகையா யிருப்பினுந் தனதுதகப்பனார் தனஞ்சய தனபதி கூறியவாக்குகளில் தன்னெருப்பை வெளியில் விடாதே வெளி நெருப்பை வீட்டுள் கொண்டுவாராதே யென்று கூறியுள்ளாரே இது நியாயமோவென்றான்.

அதனை வினவியப் பெரியோர்கள் விசாகாவை நோக்கி குழந்தாய்! அவ்வகை நிகழ்ந்ததோ வென்றார்கள்.

பெரியோர்களே! என் பிதா இவர் கூறியவண்ணங் கூறவில்லை யான்கூறும் வண்ணங் கூறினர்

பெரியோர்களே! என் தகப்பனர் கூறிய கருத்து அதுவன்று. அவரென்னை நோக்கி குழந்தாய்! உன் மாமனாராயினும், உன் மாமியாரா யினும், உன் புருஷனாயினும், உன் விஷயத்தில் ஏதேனுங் கொறாரவார்த் தைகளைப் பேசினாலும் வைதாலும் அவற்றை அயல் வீட்டிற்குச் சென்று அங்கெருப்புக்கொப்பாகிய வார்த்தைகளை சொல்லிவிடுவாயாயின் அஃது உன் வீட்டிற்கும் அயல் வீட்டிற்கும் பற்றியெறிந்து பற்பல துக்கங்களை யெழுப்பிவிடும். ஆதலின் உன்வீட்டு நெருப்பை வெளிவிடாதேயென்று கூறினரென்றாள்.

அதனை வினவிய மிகாரா தனபதி அதுசரிதான் வெளிவீட்டின் நெருப்பு உள்ளுக்கு வாராவிடின் பதார்த்தவகைகள் எவ்வகை நிகழும் இவ் வார்த்தைக் கூறலாமோ வென்றான்.

விசாகா பெரியோர்களை நோக்கி ஐயன்மீன்! எனது பிதாவின் கருத்து அஃதன்று. அண்டைவீட்டார் அயல்வீட்டார் உன்னை தருவித்து உன் மாமனாரைப்பற்றியேனும் உன் மாமியாரைப்பற்றியேனும், உன் புரு ஷனைப்பற்றியேனும் நெருப்புக்கொப்பாகிய தீங்கான வார்த்தைகள் ஏதே னும் புகல்வார்களாயின் அவ்வார்த்தையை வீட்டுள் கொண்டுவந்து நெரு ப்புக்கொப்பாங் கலகத்தை மூட்டிவிடாதேயென்று கூறினர்.

ஈதன்றி எனது தந்தையா ரோதியுள்ள மற்றுங் கட்டளையும் விவ ரிக்கின்றேன்.

கொடுத்தவனுக்குக் கொடு என்பதின் பொருள்.

உன் வீட்டிலிருக்கும் ஓர் வஸ்துவை ஒருவன் இரவல் வாங்கிக் கொண்டு மறுபடியுங் கொண்டுவந்து கொடுப்பானாயின் அவனுக்குக்கொடு.

கொடாதவனுக்குக் கொடாதே என்பதின் பொருள்.

உனதுபொருளை இரவலென்று வாங்கிக்கொண்டுபோய் மறுபடியுங் கொடாதவனுக்குக் கொடாதே.

கொடாதவனுக்குக் கொடு என்பதின் பொருள்.

கொடாத லோபியாயிருப்பினும் அவன் வருந்தி யிரந்தகாலத்தில் கொடு. கொடுத்தவனுக்குக் கொடு ஒருகால் உனக்கு வுபகாரஞ் செய்வா னாயின் பலகாலு மவனுக்குக் கொடு.

காலத்தில் உட்காரு என்பதின் பொருள்.

உன் மாமனாரேனும், உன் மாமியாரேனும், மற்றும் பெரியோர்க ளேனும் எதிரிருக்குங் காலங்களில் உட்காராதே. அவர்க ளெதிரி வில் லாதகாலங்களில் உட்காரு.

காலத்தில் சாப்பிடு என்பதின் பொருள்.

உன் மாமனார் மாமியார் புருஷன் இவர்கள் புசித்து திருப்தி யடைந்தபின் காலத்தில் நீ சாப்பிடு.

காலத்தில் தூங்கு என்பதின் பொருள்.

உன் மாமனர், மாமியார், புருஷன் நித்திறையடைந்த காலத்திற்குப்பின் நீ நித்திறைக்கொள்.

நெருப்பை கவனி யென்பதின் பொருள்.

உன் மாமன், மாமி, நாத்தி, மாதுலி, புருஷன் இவர்களை நெருப்பென்றுகவனித்து மிருதுவாக்கில் வாழக்கடவாய்.

வீட்டுதேவதைகளை விசுவாசி என்பதின் கருத்து.

உன் மாமன், மாமி, புருஷன் இவர்களை வீட்டுதேவதைகளெனக் கொண்டாடக்கடவாய் என்று கூறியுள்ளார்.

எனது தந்தை எனக்களித்த இஸ்திரீதனங்களில் அழியாதனங்கள் இவைகளே யென்று வாய்பொத்திநின்றாள்.

விசாகாவின் வாய்மொழிகள் யாவையுங் கேட்டிருந்த மிகாராதனபதி மறுமொழி கூறுவதற் கேதுவில்லாமல் நாணடைந்து தலைகவிழ்ந்து பூமியைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

இதனையுணர்ந்த கிரகஸ்தராகிய பெரியோர்கள் மிகாராதனபதியை நோக்கி மற்றுங் குற்றங்கள் யேதேனு முண்டோவென்றார்கள்.

பெரியோர்களே! யாதொரு குற்றமுமில்லையென்றான்.

யாதாமோர் குற்றமுமில்லாதிருக்க குழந்தையை வெளியிற் போகும்படிக் கூறலாமோவென்றார்கள்.

தனபதியும் பெரியோர்களும் இவ்வகையாக வார்த்தையாடிக் கொண்டிருக்குங்கால் விசாகா பெரியோர்களை நோக்கி தாங்களிவற்றை விசாரிப்பதற்கு முன் என் மாமனர் உத்திரவின்படி யான் வீட்டைவிட்டுப் போவது சிறப்பாகாது. தாங்கள் யாவற்றையும் சரிவர விசாரித்து என்மீது யாதொரு குற்றமும் ஏற்படாததினால் என்பிதாவின் சொற்படி நான் புறப்படவேண்டுமென்று கூறி தனது தோழிப் பெண்களையும் ஏவலாளர்களையு மழைத்து தனக்கு வேண்டிய தேர்பரிவாரங்களை ஆயத்தஞ் செய்யும்படி ஆக்கியாபித்தாள்.

அதனைக் கண்ணுற்ற தனது மாமனர் விசாகாவை நோக்கி அம்மணி! யான் தெரியாமற் சொல்லியக் குற்றங்களைப்பொருத்து என் மனையை சிறப்படையச் செய்யவேண்டுமென் றிரைஞ்சினன்.

விசாகா தனது மாமனரை நோக்கி பெரியோரே யான் பொருக்க வேண்டியதெதுவோ அதைப்பொருத்துக்கொண்டேன் ஆனால் புத்தருடைய தன்ம கன்மகுடும்பத்திற் பிறந்தவள் என்மனைக்கு மக்காலுந்தென் புலத்தார்வந்து அன்னம் புசிக்க வேண்டியதே சிறப்பாகும் அத்தகைய ஞானசாதகர் பாத்திர மறிந்து பிச்சையிட வுத்திரவளிப்பீரேல் இவ்விடம் தங்கி எனது மனைத்தொழில் நடாத்துவேன் அவ்வகை யிலதேல் எனக்கு வுத்திரவளிக்கவேண்டு மென்று வருந்தினள்.

அவள் அமுதவாக்கை யுணர்ந்த மிகாரா அம்மணி! உமதிஷ்டம் போல் தென் புலத்தார்க் கன்னமளித்து சிறப்படையலாமென்று கூறினன்.

மாமனர் அன்பின் வாக்கை வினவிய விசாகா தனது கிரகஸ்த பெரியோர்களிற் சிலரை தருவித்து தாங்கள் இரத மூரந்துபோய் நமது அறவாழியானாகிய அவலோகிதரும், அவரது சங்கத்தவர்களாகிய தென்புலத்தோரும் எங்கிருந்தபோதுங் கண்டறிந்து அவர்களை நமது இரதங்களிலேற்றிக்கொண்டு வந்துவிடவேண்டுமென்று ஆக்கியாபித்தாள்.

பெரியோர்களும் பெருமா னிருப்பிடங் கண்டறிந்து அருகிற் சென்று சரணாகதி வேண்டியழைத்து மிகாரா தனபதி யில்லம் வந்து சேர்ந்தார்கள்.

விசாகாவும் மிக்க பயபக்தியுடன் பதார்த்தங்களை வட்டித்து பாத்திரங்களி லளித்து தனது மாமனாரை யழைத்து பாத்திரங்களிலுள்ள வன்னத்தை பகவனுக்குப் பரிமாறும்படி வேண்டிக்கொண்டாள்.

மிகாராதனபதி முன்பொருகால் சமண முனிவர்களாகுந் தென்புலத்தோரைக் கண்டுங் காணாதவன்போல் புசித்திருந்தவனாதலின் மனங்குன்றி நாணமடைந்து விசாகாவை நோக்கி அம்மணி! விநாயகருக்குத் தாமே யன்னமளித்துவிடவேண்டுமென்று கோறினான்.

ஐயனே! அங்ஙனமாகுகவென்று விடைபெற்று தனது கணவன் புண்ணியவர்த்தன சிறுவனை யழைத்துவந்து பதியுஞ் சதியும் பகவன் பாதத்திற் பணிந்து கருணாகாரா, கணநாயகா, கங்கையாதாரா, காசிவிஸ்வேசா, கமலநாயகா, இவ்வடியாரளிக்கு மன்னத்தை அன்புடன் புசித்து எங்களைப் புனிதர்களாக்கவேண்டுமென விரஞ்சினாள்.

விசாகாவின் வணக்க வாக்குணர்ந்த விநாயகக்கடவுள் புண்ணியவர்த்தனனையும் புண்ணியவர்த்தினியையும் அறிவுபெருகவென வாழ்த்தி அன்னமுண்டு முகிந்தபின் அனைவருக்கும் அருள் மொழியை யூட்டும்படி யாரம்பித்தார்.

அக்கால் விசாகா மாமனாரையணுகி ஐயனருள்மொழியைக் கேட்கவாருங்கோளென் றடிபணிந்தாள். மிகாராதனபதி தனக்குள்ள நாணத்தினாலும் அச்சத்தினாலும் அறவாழியான் முன்பு செல்லாமல் ஓர் அறையின் திரைமறைவி லுட்கார்ந்துகொண்டான்.

உலக மூன்று முணர்ந்து வுள்ளடைந்த வொப்பிலாவப்பன் மிகாராதனபதியின் லோபகுணத்தையும், அதினால்நேர்ந்த நாணத்தையும், திரைமறைவில் வீற்றிருக்கும் அச்சத்தையும், உணர்ந்த வுலகநாதன் திரைமறைவினின்ற மிகாராவுக்கும், திரைக்கும், திரையறைக்கும் அப்புறமுள்ளவர்களுக்கும், மலைக்கு உட்புறத்தும் மலைக்கும் அப்புறமுள்ளவர்களுக்கும், சமுத்திரத்துள்ளும் சமுத்திரத்து அப்புறமுள்ளவர்களுக்கும், மெய்யருக்கும் புத்தரிவரே, சத்தியமெனனும் புத்தரிவரே, சகலலோக சாட்சியாகிய புத்தரிவரே யென்று சகல சீவர்கள் கண்ணுக்குங் காட்சியாய் நின்று சத்தியதன்மத்தை விளக்கினார்.

தனபதியாகும் அன்பரே! நீர் திரைமறைவிலிருந்தும் உம்மெய் தெரிந்துகொண்டேன் நீரும் எம்மெய் யெதிரிற் பார்க்கின்றீர்.

நீரானது நுழையா விடமுண்டோ? காற்றானது கலவா விடமுண்டோ? தீயானது தீண்டாவிடமுண்டோ? அதுபோல் மனமானது மலைவாவிடமுண்டோ இல்லை.

மனமானது விரிந்தவிடத்து சகல வரும்பொருளு மறையும், மனமடங்கியவிடத்து சகல திரைகளும் நீங்கி மூவுலகமுந் தோன்றும்.

அவ்வகைத் தோற்றத்தை யறிந்துக்கொள்ளும்படி செல்லவேண்டியமார்க்கமே புத்ததன்மமென்னப்படும். புத்ததன்மமாம் மெய்யறத்தில் நடப்பவர்களே உண்மெய்கண்டடைவார்கள். அவ்வுண்மெய்யைக் கண்டவர்களோ புறம்பாய்க் காணும் பொருட்கள் யாவும் பொய்யென் றறிந்து அவைகள் யாவுங் கடிகைக்குக் கடிகைக் கெட்டுக்கொண்டேவருங் காட்சி

களை விளக்கி உண்மெய்க்கு மேலாம் பொருள் உலகத்தில் ஒன்றுமில்லை யென்று துலக்கி சதா துக்கத்தை விலக்கி சருவசாட்சியாய் சதானந்தத்தில் நிலைப்பார்கள்.

அவர்களுக்கு அருமறைவுமில்லை, உருமறைவுமில்லை, உரைமறைவுமில்லை, இறைமறைவுமில்லை, 'அணைமறைவுமில்லை, குணமறைவுமில்லை சருவமும் அவர்களுட் டோன்றும் சன்னிதானமாகும் சருவதானங்களு முதிர்ந்து மகா நிதானமாம் சன்னிதானத்தி னிலைத்தவன் தனக்கோர் பற்றின்றி சருவ சீவர்களுக்கும் உபகாரியாக விளங்குவான்.

பகிர்முகத் தோற்றத்தில் கடிகைக்குக் கடிகை அதாவது க்ஷணத்திற்கு க்ஷணங் கெட்டுக்கொண்டேவருந் தோற்றப்பொருட்கள் யாவையுந் தாவிதாவி பிடித்து சேர்க்குமளவும் பிறவி சமுத்திரமாம் துக்கக்கடலில் ஆழ்ந்து பாசக்கயிற்றில் கட்டுண்டு துன்ப வலைகளென்னுங் கசைகளா லடியுண்டு இறப்பும் பிறப்புமாகிய துக்க சக்கர பற்களிற் சிக்குண்டு சுழல்வான்.

தேவர், மக்கள், விலங்கு, பட்சி, தாபரம், ஊர்வனம், நீர்வாழ்வனங்களென்னும் எழுவகைத் தோற்றங்களும் அள்ளல், இரவுரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதியாம் எழுநரகமென்னுந் துக்கத்தி லாழ்ந்து மாறா பிறவியிற் சுழலவைக்கும்.

ஆதலின் ஒவ்வொரு மக்களும் எழுபிறவியிற் றோற்றும் எழுநரக வாதனைகளை யநுபவியாது க்ஷணத்திற்கு க்ஷணந் தோற்றிக் கெடுக்கும் அவாக்களை யறுத்து முன் பற்றுக்களை விடுத்து அன்பின் விருத்தியாலும் நீதியின் பற்றிலும் நிலைத்து இறப்பையும் பிறப்பையும் போக்கிக்கொள்ளுங்களென்று தனது சத்தியதன்மத்தைப் பதியச்செய்தார்.

மிகாரா தனபதிக்கும் உலோபதோஷம் விளங்கி கணநாதனை வணங்கி இந்த லோபியையுந் தங்கள்சங்கத்தி லொருவனாக சேர்த்துக்கொள்ள வேண்டுமென் றிரைஞ்சினான்.

இன்னும் சிலநாள் நீரில்லற தன்மத்தில் நிலைத்து சீலம் பதிந்து சித்த சுத்த முண்டாகுங்கால் சங்கத்திற் சேர்த்துக்கொள்ளலாமென்று சொல்லிப் போய்விட்டார்.

அன்றுமுதல் விசாகா தனது மாமன் மாமி கணவன் முதலியவர்களுக்கு மிக்க அன்புடையவளாய் நடந்துவருவதுடன் பகவனும் தென்புலத்தோராம் சமணமுநிவர்களும் வந்து தங்கியிருப்பதற்கு வியாரம் கட்டிவைத்ததுமன்றி. மற்றுமுள்ள வியாரங்களிற் றங்கியுள்ள சமணமுநிவர்களுக்கு அன்னக்காவடி யநுப்புவதும், சீவரவுடையீவதும், பிட்சாபாத்திரமளிப்பதும்,ஏழைகளையாதரிப்பதும் சங்கத்திற்சேர்ந்து சமணநிலைபெற்று தன்னைப்பார்க்கும பார்ப்பார்களுக்கும் தன்னைப்பார்க்கும் பார்ப்பிணிகளுக்கும் வேண்டிய தானங்களைச் செய்துக்கொண்டே புத்திர பௌத்திரர்களுடன் ஆனந்தசுகவாழ்க்கையிலிருந்து 120-வது வயதில் மரணமடைந்தாள். அவளது நீதிமார்க்க நடையும் சத்திய தன்மச் செயலும் ஈகையின் பெருக்கமுமே யவளை நோயற்றவாழ்விலுங் குறைவற்ற செல்வித்திலு மிருத்தி கருக்கதில் நித்திய நிலைபெறும் மறுமெயடைந்தாள்.



## பதினான்காவது

# குருக்ஷேத்திர காதை.



பகவன் அந்நகரைவிட்டு முன்பு சிலநாள் தங்கியிருந்து குருக்ஷேத்திரமெனப் பெயர்பெற்றவிடஞ் சென்று அங்குள்ள பிக்ஷுகுழாங்களுக்குப் போதிக்க கருணைபுரிந்து சங்கத்தோரைநோக்கி ஓ! சகோதிரர்களே என்றழைத்தனர்.

சிஷ்யர்கள் ஐயனே யென விடை பகர்ந்தார்கள்.

பகவன் உபதேசிக்க வாரம்பித்தார்.

சகோதிரர்களே! பரிசுத்த பேறு அடைவதற்கும், துக்க, அழுகை யிவைகளினின்று விடுபடுவதற்கும், நீதியில்நடப்பதற்கும், நிருவாணநிலை யடைவதற்குமான ஓர் வழி மனுக்களுக்குத் திறக்கப்பட்டிருக்கின்றது. அவ்வழியே நான்குவித சமாதிக ளென்னப்படும்.

அந்நான்கு சமாதிகள் யாவை?

அவை, காயா - சமாதி.<br>
வேதனா - சமாதி.<br>
சித்தா - சமாதி.<br>
தம்மா - சமாதி என்பவைகளாம்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தேகவிஷயத்தில் ஜாக்ரதையுடையவனும், அறிவுள்ளவனும், ஆராய்ச்சியுள்ளவனும், காமம் துக்கம் இவைகளினின்று தன்னை விலக்கிக்கொள்பவனும் இருப்பானாகில் அவனே காயசமாதியி லிருப்பவனாவான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் உணர்ச்சி விஷயத்தில் ஜாக்ரதையுடையவனும், அறிவுள்ளவனும், ஆராய்ச்சி யுள்ளவனும். காமம் துக்கம் இவைகளினின்று தன்னை விலக்கிக்கொள்பவனும் இருப்பவனாகில அவனே வேதனாசமாதியி லிருப்பவனாவன்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் சித்தவிஷயத்தில் மனஜாக்ரதை யுடையவனும், அறிவுள்ளவனும், ஆராய்ச்சி யுள்ளவனும், காமம் துக்கம் இவைகளினின்று தன்னை விலக்கிக்கொள்பவனும் இருப்பானாகில் அவனே சித்தசமாதியி லிருப்பவனாவான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் கர்த்த விஷயத்தில் ஜாக்ரதையுடையவனும், அறிவுள்ளவனும், ஆராய்ச்சியுள்ளவனும் காமம் துக்கம் இவைகளினின்று தன்னை விலக்கிக்கொள்பவனும் இருப்பானாகில் அவனே தம்ம சமாதியி லிருப்பவனாவான்.

• ஓ! சகோதிரர்களே! ஒருசகோதிரன் தேக விஷயத்தில் ஜாக்ர தையுடன் எப்படியிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! ஒருசகோதிரன் துறந்துகாட்டிற்கேனும், ஓர் மரத்தினடியிலேனும், ஜனசஞ்சாரமற்ற விடத்திலேனும் சென்று சப்பளம்போட் டுட்கார்ந்து நிமிர்ந்ததேகத்துடனும், தியானசக்தியுடனுமிருந்து அவன் வெளிக்குவிடும் சுவாசத்தைப்பற்றியும், உள்ளுக் கிழுக்கும் சுவாசத்தைப்பற்றியும் மனத்திடை நிறுத்துவான். வெளிக்கு சுவாசத்தை வெகுநேரம் விட்டு தான் இவ்வளவதிகமாக சுவாசத்தை விட்டோமென கிரஹித்தும் உள்ளுக்கிழுக்கும் சுவாசத்தை வெகுநேரம் இழுத்து தான் அதிகமாக சுவாசத்தை உள்ளுக் கிழுத்தோமெனக் கிரஹித்தும், வெளிக்கு சுவாசத்தை சற்றுநேரம் விட்டுதான் இவ்வளவுசிறுநேரம் சுவாசத்தை விட்டோமெனக் கிரஹித்தும் உள்ளுக்கிழுக்கும் சுவாசத்தை சற்றுநேரம் இழுத்து, தான் இவ்வளவு சிறுநேரம் சுவாசத்தை இழுத்தோமென கிரகித்தும் இவ்விதமாக தெளிவுடன் சுவாசத்தை வெளிக்குவிடுவதும், உள்ளுக் கிழுப்பதுமாக அப்பியாசத்திற்குக் கொண்டுவந்து பின் இருமூச்சுகளையும் சலனமாகச் செய்துக்கொள்ளுவான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தேகவிஷய ஆராய்ச்சியில் சுவாசசம்பந்தமாக தியானிக்கும்போது பின்வருமாறு விசாரிப்பான். அதாவது வெளிக்குவிட்டு உள்ளுக்கிழுப்பதும், உள்ளுக்குவிட்டு வெளிக்கிழுப்பதுமாகிய இச்சுவாசங்களுக்கு ஆதாரமெது. ரூபமே இவைக்கு ஆதாரம். அந்த ரூபமோ பூதங்களா லமைப்பட்டது. இரண்டாவது நாமமும் பூதங்களுடன் சேர்ந்துவருகின்றது. நாமம் இஃதென தெரிந்தவுடன் அதைப் பற்றியுள தெதுவென விசாரிக்கையில் அது அறியாமெயாலென்றும் தெரிந்து நாமமும் ரூபமும் ஒன்றையொன்று பற்றியிருக்கிறதன்றி வேறு நான் என்பது ரூபமாக வருவது கிடையாது.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடையவனு யிருப்பதோடு ஏனையோருடைய தேகவிஷயத்திலும் ஜாக்கிரதையுட னிருப்பான். தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் தோன்றி அல்லல்பட்டு அழியுமெனவும், தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் தளர்வடையுமென்றும், தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் வீழ்ந்துவிடுமெனவும் நிதானித்து தியானிக்கும்போது தேகமட்டும் இவனுக்குத் தோன்றுமன்றி ஜீவஸத்தியென்றும், பெண் இதென்றும், ஆண் இதென்றும், நான் எனது என்றும், ஆட்டும் பொருளென்றும், மனிதரூபமென்றுந் தோன்றாது இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடன் அறிவை விருத்திசெய்துவர தியானசக்தி அதிகரித்து தனிபுருஷனாகிய உலக பற்றற்று நிற்பன். ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக ஒரு சகோதிரன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாயிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் நடக்கும்போது நாம் நடக்கின்றோமென அறியும் திறமுடனும், நிற்கும்போது நாம் நிற்கின்றோமென அறியும் திறமுடனும், உட்காரும்போது நாம் உட்காருகிறோமென அறியும் திறமுடனும், படுக்கும்போது நாம் படுக்கின்றோமென அறியும் திறமுடனும், மற்ற எந்த நிலைமையிலிருந்தபோதிலும் அந்த நிலைமைகளில் அறியுந் திறமுட னிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! முன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடனிருந்து அதன்பின் தேகநிலைகளைப்பற்றி தியானிக்கத் திரும்புகின்றான்.

பக்குனி.--இல்லை, பிரபுவே.
குரு:--நீ மனுஷ்ய ஜாதியைச் சேர்ந்தவனா.
பக்குனி:--ஆம், பிரபுவே.
குரு:--நீ ஆண்மையனா?
பக்குனி:--ஆம், பிரபுவே.
குரு:--நீ போர்க் களத்தில் யுத்தம் செய்பவனல்லவே?
பக்குனி:--அல்ல, பிரபுவே.
குரு:-உன்னைப் பெற்றோர் சம்மதத்தைப்பெற்று வந்திருக்கிறாயா?
பக்குனி:--ஆம், பிரபுவே.
குரு:--உனக்கு இருபது வயதாகிவிட்டதா?
பக்குனி:--ஆம், பிரபுவே.
குரு:--உனக்குப் பிக்ஷாடனபாத்திரமும், காஷாய வஸ்திரமும் இருக்கிறதா?
பக்குனி:--ஆம், பிரபுவே.
குரு:--உன் பெயரென்ன?
பக்குனி:--என் பெயர் ஞானவன்லா.
குரு:--உனக்கு ஆசாரியன் யார்?
பக்குனி:--எனக்குஆசாரியன் பரிசுத்தமானதர்ம்மகீர்த்தி, பிரபோ.

இரண்டு குருமார்களும் சபையின் முன்னேபோய் சபாநாயகருக்கு நமஸ்காரம் செய்து பின்வருமாறுகூறுவார்.

ஆசரியர்காள்! செவிசாய்த்துக்கேட்டருளுங்கள். பக்குனி பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியின்கீழ் ஆசார்யனாய்ச் சேர்க்கப்பட விரும்புகிறான். குருமார் சபைகூடுதற்குச் சமையம் இதுதான். பக்குனி இவ்விடம் இருந்தால் அருகில் வந்து நிற்கக்கடவன், ஒருகுருபக்குனியருகில் வாவழைக்கிறான் பக்குனி வந்து இரு குருமார்களுக்கும் மத்தியில் வந்து நின்று முழங்கால் பணியிடுகிறான் ஆசரியர்காள்! என்னைக் குருவாக அங்கீகரிக்கவேண்டுகிறேன். ஆசரியர்காள்! என்பேரில் கடாக்ஷம்வைத்து என்னை ஆதரியுங்கள். மூன்றுமுறை பக்குனி எழுந்து நமஸ்கரிக்கின்றான். குருமார் பின்வருமாறு கூறுவார்கள். ஆசரியர்களே! யான் சொல்லுவதைக் கேட்டருளுங்கள். பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியினடிக்கீழ் ஆசிரியனாய்ச் சேர்க்கப்பட விரும்புகிறான். ஆசரியர் சபைகூடச் சமையம் இதுதான். ஆசரியனாயிருக்கத் தக்கவனாயிருக்கின்றானென்று பக்குனியைப் பரீக்ஷிக்கிறேன்.

கேள்விகள் முடிவு பெறுகின்றன. பிறகு ஒரு ஆசரியன் இவ்வாறு கூறுகின்றான்.

பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியின்கீழ் ஆசார்யனாயிருக்க இந்தபக்குனி வேண்டுகிறான். அவன் அந்த பதவிக்குரிமையுள்ளவன். அவனுக்குப் பிக்ஷாடன பாத்திரமும் காஷாய வஸ்திரமும் உண்டு. இந்த பரிசுத்தமான சபையில் யாருக்காவது அங்கீகாரமாயிருந்தால் பேசாமலிருக்கட்டும் யாருக்காவது ஆக்ஷேபமிருந்தால் அவன் எழுந்து சொல்லலாம், சபையார் அவனைக் குருவாய்ச் சேர்த்துக்கொள்ள அங்கீகரிக்கிறார்கள். மூன்றுமுறை இரண்டு குருமார்களும் சபாநாயகருக்கு நமஸ்காரம்செய்து பின்வருமாறு கூறிமுடிப்பார்கள். பக்குனி பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியின் கீழ் குருபதவிக்குச் சேர்க்கப்பட்டான். சபையார் இதை அங்கீகரிக்கிறார்கள். ஆகையால் வாய்திறவாமல் இருக்கிறார்கள். ஆதலால் இதுதான் உங்கள் விருப்பமென்று தெரிந்துக்கொள்ளுகிறேன். சங்கபோதமுடிந்த

வுடனே அறவாழி யந்தணன் ஆனந்தனை நோக்கி சகல சங்கத்தலைவர்களையும் அருகி லழைக்கும்படி யாக்ஞாபித்தார். சகல சங்கத்தலைவர்களும் அருகில் வந்து அறனை வணங்கி வாய்பொத்தி நின்றார்கள். அவர்களது வன்பின் பெருக்கையுணர்ந்த வருகன் ஆனந்தமுற்று சங்கத்தலைவர்களே! ததாகதர் கண்டக் காட்சியை உலகிற் றோன்றியுள்ள மக்கள் யாவருக்கும் விளக்கி என்றும் அழியா மெஞ்ஞான விளக்கை யேற்றிவிட்டார். சங்கத்தலைவர்களாகிய நீங்கள் மேலுமேலு மதைப் பிரகாசிக்கத் தூண்டி ஞானவொளியில் நிலைத்து நிருவாணம் பெற்று அறஹத்துக்களும் பிராமணர்களுமாகி சருவ சீவர்கள்மீதும் அன்பு பாராட்டி சத்தியதன்மத்தை மாறுமனூட்டி தற்காலம் ததாகதரடையும் பரிபூரண சுகமாம்.) பரிநிருவாணமடைந்து பிறவி துக்கத்தை யொழித்துக்கொள்ளுங்களென் றடங்கிவிட்டார். *அவர் உழ்க்கார்ந்திருந்தபோது தேகமுழுவதும் வான்போன்ற சோதிவீசி பரந்தது. சிரசின் உச்சியில் ஐந்துபிளப்பமைந்த ஒளிஓங்கி வளர்ந்தது. அருகினின்ற ஆனந்தனும் பிருங்கியும் அறஹத்துக்களும் ஆனந்தக்கண்ணீர் ததும்பக் கலங்கினார்கள்.

அதுசமயத்தில் விதற்பநாட் டரசனும் அவன் மந்திரியும் தங்களுக்கு நேரிட்டுள்ள சங்கைகளைத் தெளிந்துக்கொள்ள வேண்டுமென்று அருகிலோடிவந்தார்கள். அவைகளை யுணர்ந்த வருகன் அறப்பள்ளியில் தன

---

*வீரசோழியம்.—கூரார் வளையுகிர்வாளெயிற்றுச் செங்கட்,கொலையுழுவை. காய்பசியாற்கூர்ந்த வெண்ணெய்நீங்க, வோராயிரங்கதிர் போல்வான் விரிந்தமேனி, யுளம்விரும்பிச்சென் றாங்கிரையாதனை நீ, யென்றான். காரார் திரைமுளைத்த செம்பவளமேவுங், கடிமுகிழ் தண்சினையகாமரபூம்போதி, யோரார் முனிவரர் வானவர்தம் கோவே, யெந்தாயரோ நின்னை யேற்றுதாரயரோ.

வீரசோழியம்.— திருமேவு பதுமஞ்சேர் திசைமுகனு முதலாகு, வுருமேவி யவதரித்து வுயிர்களைத்து முயக்கொள்குவான், இவ்வுலகும் மேழுலகு மிசையுலகு மிருள்நீங்க, வெவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்த செழுஞ் சுடரென்ன, விலங்கு கதிரோளிரண்டு விலங்கிவலங்கொண்டுலவ, வலங்குசினைப் போதிநிழ லறமமர்ந்த பெரியோய் நீ.

அருங்கலைச்செப்பு.—பரிநிருவாணப்பத்து—பரமுத்தியாய பாக்கியத்தைப் பெற்றான்,திரிந்தி காண்டச்சிவன். வான்போன்ற நல்லொளிவளர்த்தானுடலெங்கும், நின்விசும் புலவும் நிலை. உச்சி வழியா லைந்துகிளையுள்ளொளியின்,சொச்சவன் கண்டகன்ற சீர். அம்பரமா முன்னொளியே நல்லொளியாய் தோன்றி, உம்பர்க்குயர்வழி யானான். பிறவியறுத்தப் போனொளியைக் கண்டோர், துறவிஞானந்தவிதென்றார். சுவாகுநீ கிலையே குழொளியதாகி, பகவனெனப்பரந்த பேர். சுகங்கண்டடைந்த சுழிமுனையாக் தோற்றம், அகண்டத்துலாவுவதேயாம். புவியத்திற் காலூன்று பொன்னொளிதேகத்தின், அவியாமுதற் பரமானார். ஒளி கனலற்ற வுண்மையாந் தண்ணொளியாய்க், களிப்பவர்க் காட்சியதுவாம். கருணை வடிவுங் காட்சி நல்ஞானத்தோர், குருவடிவாய்த் தோற்றுமொளி.

அருங்கலைச்செப்பு.—பகவன் பரிநிருவாண காலப்பத்து.—உத்திராயணநிலய முன்னத்தொளியாய், சித்திரபானுக் கனிதஞ்சேர். அல்லும்பகலுமது வகன்ற வுள்ளொளியாய், பல்லவத்திலே யமர்ந்தான் பார். அங்கத்தொளிருமந்த ரங்கவுள்ளொளியாய்க, கங்கைக் கரையமர்ந்த சீர். சீர்சிறந்த செவ்வேள் சிரவொளிமெய்க் காண்டல், மார்கழியின் மாமதியமாம். துங்கநிலயத்துளி ரொளியங்காண்டல், மங்களவாரத்தின் மகிழ் குருவாகவந்தான் குளிர்ந்தவொளி திரண்டான், திருவாதிரைநாளிற் சீர். காரணமாய் நின்றான் கமலவொளிசிறந்தான்,பூரணைநாட் கொண்டான் புகழ். படியதிர்ந்ததெங்கும் பரிவையுள்ளொளியாய், விடியர்காலத்தின் வெளிர். வழியது கடந்தான் உள்ளொளியாய் நின்றான், காழிகையைம்பத்தாறதாம். சிலம்பிறைந்த செவ்வொளியைக் கண்டார், கோலுநவே லக்கினமதாம்.

அலக்கையால் சிரந்தாங்கி காலீட்டிப் படுத்துவந்தவர்களை யருகில் வரச் செய்து சங்கையை விளக்குங்கோளென்று கூறினார்.

விதர்ப்பநாட்டரசனும் மந்திரியும் விவேகமிகுத்தோன் உடலிற் றோன்றும் ஒளியையும் அதன் குளிர்ந்தப் பிரகாசத்தையும் கண்டு திகைத்தும் பயந்தும் வாய்பொத்தியும் நின்று ஒப்பிலா வப்பனே! எங்களுக்குள்ள சங்கையாதெனில், எங்களைக் காப்பாற்றும் பொருள். யாதேனும் உண்டா யில்லையா வென்பதேயா மென்றார்கள். அம்மொழிகளைக்கேட்ட வருகன் இருவரையு நோக்கி உண்டென்பதை உங்களுள்ளத்திலும் இல்லையென்பதை தோற்றும் பொருள் க்ஷணத்திற்கு க்ஷணம் அழிதலினும் அறிந்துக்கொள்ளலாம். அன்னையானவள் குழந்தைக்கு அன்னத்தைதூட்டுவாள். அதனை விழுங்கித் தன்னைப் போஷித்துக்கொள்ளவேண்டியது குழவியின் செயலாகும். அதுபோல ததாகதர் தான்கண்டடைந்த சுகவழியைப் போதிப்பார். நீங்களோ அவ்வழியிற்சென்று சுகமுற்று உண்டாயில்லையாவென்பதை உங்களுக்குள் நீங்களே யுணர்ந்துதெளிந்துக்கொள்ளல்வேண்டும். உண்டென்னிலோ விசாரிணையற்ற சோம்பலால் எங்குண்டென்னும் எதிர்வினாத் தோன்றும். இல்லையெனிலோ மதோன்மத்தச் சோம்பலால் யாதுக்கில்லையென்னும் பதில்மொழித் தோன்றும். ஆகலின் உண்டென்பதை அவனவனுள்ளத்திலும் இல்லையென்பதை அவனவன் விசாரிணையிலுமே தெரிந்துக் கொள்ளவேண்டிய தியல்பாமென்று தனதிருக் கண்களையும் மூடி மார்கழிமீ பௌர்ணமி திதி திருவாதிரை நட்சத்திரத்தில் பரிநிருவாண மடைந்துவிட்டார்.

ஆனந்த நகரமென்னும் பல்லவநாட்டில் பேறியாற்றங்கரையென்னும் கங்கைக்கரையென்றும் வழங்குமிடத்தில் சித்திரபானு வருஷம் மார்கழி மாதம் 28-வது நாள் மங்களவாரம் பௌர்ணமி திதி விடியர்காலம் 56 நாழிகை துலாலக்கினத்தில் பரிநிருவாணமுற்றபோது தேகமெங்கும் குளிர்ந்த ஒளி வீசவும் உச்சியினொளி வோங்கிவளரவும், பூமியதிரவும், மேகங்கள் பாலிநிற்கவும் தாமரைமலரவும், கண்ட சங்கத்தோர்கள் யாவரும் கலக்கமுற்று தேவாதிதேவனை யென்றுகாண்போம், திருமூர்த்தியை யென்று காண்போம், மூவாமுதல்வனை யென்றுகாண்போம், முத்திக்குமுதல்வனை யென்றுகாண்போம், சித்தார்த்தி திருவுருவை யென்றுகாண்போம், திங்கள் முகவதனத்தை யென்றுகாண்போம், தேஜோன்மயவுருவை யென்று காண்போம். அழியாதஅறவுரையை யென்றுகேட்போம், அமுதமொழியறநெறியை யார்பால்கேட்போமென்று கதறியழுது தாயிழந்த குழவி போல் பதறிநின்றார்கள்.

*சங்கத்தோர்களில் விவேகமிகுத்தவர்கட் சிலர் தங்கள் குருபரன் தனது தேகத்தில் பிணியொன் றணுகாமலும், நரைதிரைவாய்த்து மூப்

---

*விம்பாசாரம்விழாவணைக்காதை - இறைமகற்காத னெண்பானேந்திற், குறைமிருகாலக் கூற்றங் கடிந்து, தக்கக் கடைநா டனுவாதிரையிற், பக்கமங்கலம் பருமதிகோலாய், போதி நீழற் பொருந்திய புத்தேன், சோதிபஞ்சக் சூழொளியாகி, ஆன வைகரை யார்ப்ப வானவன், போனக விழாக்கோள்.

வீரசோழியம்.— மணியிலகு செறிதவிரோ டலரொளிய, நிழலமர மருவியுறவோர், பிணிவிரவு துயரொடு பிறவிகெட, வுரையருளும் பெரியவருளோன், முனிபிலகு சுடருடைய வுடலொடு, பிரமனெனுந் தலைமையவர் மா, வணியிலகு கமலமல ரனையவெழி, லறிவனிணை யடிகடொழுவாம். போதிமேவினை பொய்ம்மையகற்றினை, சோதிவானவர்தொழவெழுந்தருளினை, ஆதிநாதனினடியினை பரவுதும்.

பண்டையாமனும் குமாரபருவ அக தேஜஸினிருந்து பஞ்சாவஸ்தையாம் மரண வாதையின்றி ஆனந்தச் சொரூபமாய் சகல நங்காண பரிநிருவாணமுற்ற படியால் ஆனந்தக் கூத்தாடி அருள் நிறைந்தோம் அருள் நிறைந்தோமென்றுபாடி பெருநிட்டையில் நிலைத்தார்கள்.

மற்றைய சங்கத்தோர்கள் சித்தார்த்தர் பரிநிருவாணமடைந்த செய்தியை அவரது வம்மிஷவரிசையோர்களாகும் சாக்கையர்களுக்கும் தேசபாதுகாப்பாளராகும் மல்லர்களுக்கும் தருமப்பிரியவரசர்களுக்குந் தெரிவித்தார்கள்.

முக்கியமான யெழு வரசர்கள் தங்கடங்கட் பரிவாரங்களுடன் வந்துசேர்ந்து பரிநிருவாணசயனத்திலிருக்கும் நிபலநிலைக்கண்டு பிணிமூப்பணுகா பெரியோன் தேஜசும், நரைதிரை காணா நாதன் வடிவுமே பிறவி சமுத்திரத்தைக் கடந்த பேரின்பசாட்சியென்றுணர்ந்து அருகரூதே அருளாழி வேந்தே நீவிராசை துறந்த பெருமெய் குமாரபருவம் நீங்கா துயிற்பால் விளங்குகின்றது. யாங்களோ வீண்டம்ப அநுபோகத்தினின்று மாறாப் பிணியாலும மூப்பாலுந் துக்கத்தைப் பெருக்கிக் கொண்டேவருகின்றோம். அரசர்களென்னும் பெயர்பெற்றும் அல்லலும் அவதியும் எங்களை விட்டகன்றதில்லை. ஆறுதலற்ற மனோதுக்க தேகதுக்க செயலால் கசிந்திறையற்று திகைத்து நிற்கின்றோம் தாங்களோ ஆனந்த நித்திரையிலயித்து சதா விழிப்பினின்று சருவசீவர்களுக்கும் சத்தியதன்மத்தையூட்டிய நாவானதயாவும் கருணைநோக்க விழியானது மூடவும் இன்றுதான் கண்டோம். இனியார் பால் அறவுரைக் கேட்போம். இனி யாவரது கிருபாநோக்கம் பெறுவோமென் றலறிவீழ்ந்து அறஹத்துக்களால் ஆறுதலடைந்து அறவாழி யந்தணன் தேக தகனத்திற்காய் வருளமான சந்தனக்கட்டைகளையும் கற்பூரத்தையும் அகிற்றைலங்களையுந் தருவித்தார்கள். சாக்கைய வம்மிஷவரிசையோரும் மல்லர்களும் மற்றுஞ் சங்கத்தோர்களும் வந்து சேர்ந்து பொன்மதில் வெள்ளிமதிலமைந்த சித்திரமாளிகையிற்சாணித்த தேகம் மரத்தடி புழுதியில் இருகால்களை நீட்டி வலதுகையை சிரசிற்றாங்கி ஓலையின் பன்னகசயன வறப்பள்ளியுற்றிருப்பதைக்கண்டு தலைத்தார் வேந்தர் பதியைத் துறந்தசுகம் இதுதானோ, அன்புநிறைந்த யசோதரையைத் துறந்த வானந்த மிதுதானோ, உலகச் சக்கிராதிபதியாகும் ஓர் மகவைத் துறந்த வுல்லாச மிதுதானோ வென்றவரடியில் வீழ்ந்து கதறி அவர் பரிநிருவாண வானந்தமறியாத வஞ்ஞான முற்றோர் சிலர் யாதாமொரு பிணியுமின்றி சுகதேகத்துடனிருந்தவர் எவ்வகையாலிறந்தார். யாது புசிப்பெடுத்தார், இவரது மரணத்திற்குக் காரணம் யாதென்று கண்கலங்கி நின்றார்கள்.

சாக்கையர் பிரிவாற்று மூவடி வெளி விருத்தம்.

உலக மிருண்டனவா லுள்ளொளி பிரிந்தனவா லென்செய்கோம்யாம்
இலகு மொளிகுளிர்ந்தியங்கும் பாந்தனவா லென்செய்கோம்யாம்
சலமலிந்த கடலலைகள் சாலவமர்ந்தனவா லென்செய்கோம்யாம்.

கொண்டல் முழங்கினவாற் கோடற்பார்ந்தனவா லென்செய்கோம்யாம்
வண்டுவரிபாட வார்தவளம் பூத்தனவா லென்செய்கோம்யாம்
எண்டிசையுந்தோகை மிசைந்தகலிபெய்கினவா லென்செய்கோம்யாம்.

குலமாசேபோர் கூடியொரு கூக்கல் முழக்கினவா லென்செய்கோம்யாம்
கலகலெனுங்கிண்கிணியார காதல்கிளைநந்தனவா மென்செய்கோம்யாம்
பலகலையுமேய்ந்த தொனியாகல் மறைந்தனவா லென்செய்கோம்யாம்.

அமுதவாக்கின்மொழியாம் அறமுமறைந்தனவா லென்செய்கோம்யாம்
குமுதமலர்விற்றிருந்த கோமான் மறைந்தனனே யென்செய்கோம்யாம்
சுமுகசுகவாருதியின்கூ முலமர்ந்தனவா லென்செய்கோம்யாம்.

கங்குலபாந்தனவா காந்தள் நிறைந்தனவா லென்செய்கோம்யாம்
சங்கங் குமிங்கினவா சாக்கை பொடுங்கினகா லென்செய்கோம்யாம்
மங்குமமர்ந்தகுரு வங்க மறைந்தனகா லென்செய்கோம்யாம்.

எல்லாமுணர்ந்த மொழியார்பா லுணர்ந்தறிவோ மென்செய்கோம்யாம்
கல்லாலமர்ந்தசுகக் காட்சியெங்குகண்டறிவோ மென்செய்கோம்யாம்
சொல்லா லுணர்த்துசுக சூட்சமொழிகண்டறியோ மென்செய்கோம்யாம்.

சீலசுகமளித்த செல்வநிலை யெங்குணர்வோ மென்செய்கோம்யாம்
காலநிலையைவென்றகாட்சிதனை யென்றுணர்வோ மென்செய்கோம்யாம் [ம்.
வாலவறிவமர்ந்தோன்வாய்மொழியைக்கேட்டிலோமேயென்செய்கோம்யா

மறுளறுத்தப்பெரும்போதி மாதவனைக்கண்டிலமா லென்செய்கோம்யாம்.
அருளமர்ந்ததிருமொழியாலறவழககக்கேட்டிலோமா லென்செய்கோம்யாம்
பொருளறியு மருந்தவத்துப் புரவலனைக்கண்டிலமா லென்செய்கோம்யாம்.

துக்கநிலைநா லுணர்ந்தத்துயவனைக்கண்டிலமா லென்செய்கோம்யாம் [யாம்
பக்குவமெய்ப்பாங்குரைக்கும்பாதன்மொழிக்கேட்டிலமா லென்செய்கோம்
இக்கெட்டுணர்ந்தானின் தேய்வுநிலைக்கண்டறியோ மென்செய்கோம்யாம்.

பேரியாற்றங்கரையில் வந்திருந்தப் பெருங்கூட்டத்தோருள் விவேகமிகுத்த அறஹத்துக்களும் மற்றும் பெரியோர்களும் மாதவன் தனது பெருமுயற்சியால் கண்டுபிடித்த துக்கநிவர்த்தியின் மார்க்கங்களையும் அம்மார்க்கத்தில் நடந்து மாறிமாறி பிறக்குந் துன்பங்களையும் பிணியின் துன்பங்களையும், மூப்பின் துன்பங்களையும், மரணத்தின் துன்பங்களையும் ஜெயித்து ஜெயசீலனாக விளங்கி பரிநிருவாணமுற்ற பக்குவத்தையுங் கண்டுணர்ந்து உலகத்தி லிதுவரையுங் காணா பேரின்ப சுகமும் பெரும்பேரு மிதுவேயென் றுணர்ந்தக் கூத்தாடி அவரது ஏகசடையைக் கத்திரித்துவைத்துக்கொண்டு தாங்களும் பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு வாய்மெயில் நிலைத்து பிறப்பை ஜெயிக்கவும், பிணியை ஜெயிக்கவும், மூப்பை ஜெயிக்கவும், மரணத்தை ஜெயிக்கவுமாயசுக சாதனங்களில் நிலைத்து சதாவிழிப்பினும் ஜாக்கிரதையினும் நிலைத்துக்கொண்டார்கள்.

அத்தகைய விவேகமில்லாதவர்களும் அறிவின் விருத்தியற்றவர்களும் ஆசாபாசப் பற்றுக்களையே மேலாக விரும்பினவர்களுமாகியக் கூட்டத்தோர்கள் யாவரும் தங்களைப்போற் பிணியாளதையினும், மாறுவத்தையினும் சித்தார்த்தர்வருந்தி சிவனைவிடாது தேகமும் சுபாதேஜசும் பெற்றிருக்க இறந்துவிட்டாரென்றுக் கேட்டவுடன் எவ்வகையா லிறந்தா ரென்னும் விசாரிணையே பெரிதாகக்கொண்டு உசாவிலருக்கால் சேனிய னென்னும் அரசனளித்தப் புசிப்பில் கூர்முகக் கரி சமைத்தளித்து என்றுங் இன்றறியாதவ ரதனைபுசித்து இறந்தாரென்று தங்களுக்குள் ஒருவருக்கொருவர் பேசி வருதிபடக் கூறவாரம் பித்துக்கொண்டார்கள்.

விவேகமிருந்தோர் அவர்களின் அவிவேகக்கருத்தை கடிந்து பரிபூரண பரிநிருவாணப் பேரின்பத்தை விளக்கியும், அவர்களெங்குங் கண்டுங் கேட்டுமறியா பரிநிருவாண சுகநிலையறியாது தங்கடங்க ளஞ்ஞானப் பெருக்கின் பிடிவாதத்திலே நின்றுவிட்டார்கள்.

அரசர்களும், சங்கத்தோர்களும் அறவாழியான் தேகத்தைப் பல்லக்கில் வளர்த்தி அரசர்களும், அறஹத்துக்களு மதனை யேந்திக்கொண்டு அரசசின்னங்களாம் பலவகை வாத்தியகோஷங்கள் முழங்க வெண்குடை, வெண்கொடி, வெண்சாமரைகள்வீச சுத்தோதயனென்னும் மண்முகவாகு சக்கிரவர்த்தித் திருமகன் சித்தார்த்தி சக்கிரவர்த்தி பிறப்பை ஜெயித்தார் பிணியை ஜெயித்தார், மூப்பை ஜெயித்தார், மரணத்தை ஜெயித்தாரென்னும் ஆனந்தக்கூத்தாடிக்கொண்டே வம்மிஷவரிசையோராம் சாக்கையர்களும், பாதுகாப்பாளராகும் மல்லர்களும் புடைச்சூழ்ந்து நெருங்கக் காசி கங்கைக்கரைப் பல்லவநாட்டைச்சார்ந்த ஆனந்தநகருக் கெடுத்துச்சென்று அவ்விடமுள்ள ஓர் விசால பூமியில் அரசர்களால் கொண்டுவந்திருந்த சந்தனக்கட்டை, கற்பூரம், அகிற்றைல முதலியவைகளை விட்டுப் பாப்பி பல்லக்குடன் தேகத்தை யவற்றுள்வைத்து மேலுமேலும் சந்தனக்கட்டைகளால் மூடி நெருப்பிடுவதற்கு ஒருவருக்கொருவர் மனம்வராது தூரவே விலகிநின்று சாந்தரூபத்தில் எவ்வகையா லக்கினியை வளர்ப்போம், அன்பே வோருருவாய ரூபத்தில் எவ்வகையால் அக்கினியை வளர்ப்போம், தருமமே ஓர் வடிவாய தேகத்தில் எவ்வகையா லக்கினியை வளர்ப்போம், ஈகையே பேருருவாய ரூபத்தில் எவ்வகையா லக்கினியை வளர்ப்போமென்றும் பெருங்கூச்சலிட்டு அவற்றைக்கொளுத்துங் கொள்ளிக்குக் காரணர் அவரது *ஏகபுத்திரர் இராகுலரே என்று சகலகூட்டத்தோருஞ் சம்மதித்து அவரது புத்திரரைக்கொண்டே தீ மூட்டிவிட்டார்கள்.

சித்தார்த்தரது தகனத்தின் மறுநாள் ஏழரசர்களும், சங்கத்தோர்களும் வந்துசேர்ந்தார்கள். சாக்கையர்களும், மல்லர்களும் அவ்விடமே காத்திருந்தும் சந்தனக்கட்டைகளை அதிகமாக வடுக்கி தகனித்தபடியால் அக்கினி தணியாமலிருந்தது. அரசர்களோ அவரது அஸ்தியையும் சாம்பலையுங் கொண்டுபோய் பக்தி மாறாதிருப்பதற்காய கட்டிடங்களைக் கட்டி அவற்றுள் வைத்துக்கொள்ளவேண்டுமென்று ஆரம்பித்ததின்பேரில் அத்தணலை தண்ணீர்விட்டு அவிக்கப்படாது பால்விட் டவிக்கவேண்டுமென்னும் அன்பின்மிகுதியாற் குடங்குடமாகப் பால் கொண்டுவந்தவித்து அஸ்திகளை யெடுக்குங்கால் அரசர்களுக்குள் எமக்குமக்கென்னும் வாதுகள்பெருகி கலகத்திற காயத்தமானபோது சங்கத்து அறஹத்துக்களாம் அந்தணர்கள் தருமச்சக்கிரப் போதனையூட்டி சாந்தத்தை நிறப்பி அரசர்களின் வாதுகளை யகற்றி அவர்கட் பிரியம்போல் அஸ்திகளையும், சாம்பலையும் எடுத்துப்போம்படி செய்துவிட்டார்கள்

அரசர்கள் கொண்டுபோன அஸ்திகளை ஏழு இந்திரவியாரங்கள் கட்டி அதனதன் மத்தியில் புதைத்து அஸ்தியாம அங்கலய அயிக்கியபீடம் தெரிந்துக்கொள்ளுவதற்காய் உயர்ந்த பச்சைக் கற்களாம் மரகதங்களாலும், வைரங்களாலும் குழவிபோல்செய்து அவ்விடம் புதைத்து அஸ்

---

* காசிக்கலம்பகம்.—கேயூர ஹாரக் கிளர்தோ ளகிலேசர், மாயூர மூருமொரு மைந்தற்குத்-தீயூரு, மவ்வேலை யீந்தா ரடிதொழும்பு செய்தொழுகு, மிவ்வேலை யீய்ந்தா ரொமக்கு.

திலைத்துள்ள விடங்கண்டு அறவாழியானை பக்திசெய்யும் வழி தேடிக் கொண்டார்கள்.

அரசபுத்திரர்களாகிய கோபாலர்களோ சிறு சிறிய பேழைகளை செய்துவந்து குருவை தகனஞ்செய்த சாம்பலாம் மாபூதியை அவைகளி லடக்கஞ்செய்து வைத்துக்கொண்டு காலைக்கடனை முடித்து தேகசுத்தம் முடிந்தவுடன் சிறு பெட்டியிலுள்ள மாபூதியாம் சாம்பலை சற்குருவின் சிந்தனையும் தருமமும் மாறாதிருக்க புத்த, தன்ம, சங்கமென்னும் மூன்றையும் சிந்தித்து மூன்று கோடுகளாக நெற்றியிற்பூசி அவ்விடம் மிகுந்துகிடந்த சந்தனக்கட்டைகளையு மெடுத்து அறைத்துக்களாம் தென்புலத்தோர் உத்தரவின்படி உரைத்து புருவமத்தியில் பொட்டிட்டு புருஷோத்தமனை சிந்திக்கும்படி ஆரம்பித்துக்கொண்டார்கள். சாக்கையக்குடும்பத்தோர்களும், அஸ்தியைக் கொண்டுபோய் அங்கலயஞ் செய்துள்ளக் கூட்டத்தோர்களும் சித்தார்த்தரது ஏகசடையைக் கத்திரித்து இஸ்திரீகள் கூந்தலுடன் முடிந்துகொண்டதுடன் புருஷர்கள் வெள்ளியினாலும், பொன்னினாலுங் கூடுகள்செய்து அதனுள்ளடக்கி குருவின் சிந்தனை மாறாதிருக்கக் கழுத்தி லணிந்துகொண்டார்கள்.

அஸ்தியைப் புதைத்த அங்கலய பீடமாம் லய அங்க பீடத்தையும் ஏகசடையாம் அங்க பாகத்தையும் இலிங்கமென வழங்கி குரு சிந்தனை மாறாது தன்மசிந்தனையி லயித்திருந்தார்கள்.

சாக்கைய வம்மிஷவரிசையோர் சற்குருவை தகனஞ்செய்தவிடத்துள்ள மகாபூதியாம் சாம்பலின்மீது ஓர் இந்திரவியாரங்கட்டி மகாபூதியென்னு மோர் பெயரளித்தார்கள். மற்றும் நாதனை தகனஞ்செய்தவிடத்திற்கு ஜகந்நாதமென்னு மோர் பெயரையு மளித்தார்கள். நாதனது அஸ்தியை அடக்கஞ்செய்த வோர் தேசத்திற்கே அஸ்திநாதபுர மென்னும் ஓர் பெயரையு மளித்தார்கள்.

அதே காசியம்பதியில் பகவன் ஆதியில் தன்மசங்கத்தை நாட்டி ஆதிவேதம் போதித்தவிடத்தில் பெரும் வியாரங்கட்டி பகவன் சின்முத்திரா ரூபத்தையும், பரிநிருவாணகால ரூபத்தையும் ஸ்தாபித்து காசிநாத வியாரமென்றும், காசிவிஸ்வேச வியாரமென்றும் வழங்கிவந்தார்கள்.*

கங்கை ஆதாரனும் புத்தபிரானுற் றோன்றிய கங்கைக்கரையின் அருகிலேயே அறவாழியான் பள்ளிகொண்ட பரிநிருவாண வானந்தத்தால் கங்காநதி ஸ்நானத்தையும், சங்கறர் அந்தியமான பீடத்தையும், புத்தகயாவென்னும் பதியையும், உலகிலுள்ள சகல பௌத்தர்களுஞ் சென்று தெரிசித்து கங்கையில் மூழ்கி காசிநாதா! காசி விசுவேசா! கங்கை யாதரா! கமலநாயகா! கருணாலயனே யெனக் கொண்டாடிவந்தார்கள்.

---

* காசிக்கலம்பகம். — குடமுடைந்த தென வானினங்கண்மடி மடைதிறந்து பொழிபாலொடு, கொழுமடற் பொதிய விழ்ந்தகைதைதொழு சோறுமிட்டணிதிருக்கையாற்,கடல்வயிற்றி நிறப்புகின்ற சுர கங்கைகுண்ட கழியாரெடுல், கனைநீன் குடுமி மதில்களேழுடைய காசிமே வு மகிலேசரே.

முத்திக்குவேட்டவர் மோட்டெடற்பாசமுடைத்தலையோடு, அத்திக்கும் சாம்பற்கு மோம்பினரா விலையன்றி யப்பாற், சித்திப்பதமற்றிலைபோலுங் காசிச் சிவபெருமான், பத்திக்குக் கேவலமே புண்மாகப் பலித்ததுவே.

மணிமேகலை.

புத்ததன்ம சங்கமென்னும்
முத்திரமணியை மும்மையில் வணங்கி.

—o—

காயங் கரையெனும் பேரியாற் றடைக்கரை
மாயமின் மாதவன் றன்னடி பணிந்து
காசிமா நகர் கடல்வயிறு புகாமல்
வாசவன் விழாக்கோல் மறவேலென்று.

—o—

காசிக்கலம்பகம்.

பொன்னுருக்கென்ன பூந்துணர் கொன்றையும்
வெள்ளிமுளை யன்ன விரிநிலாக் கொழுந்துங்
காந்தண்மலர்ந்தன்ன பாந்தளி னிறையுந்
திரைசுழித்தெரியும் பொருபுனற் கங்கையில்
வெள்ளிதழ்க்கமலம் வள்ளவாய் விரித்தென
முழுநகை முகிழ்க்குங் கழுமுடை வெண்டலை
தோலடிச்செங்காற் பால்புரை வரிச்சிறைக்
கிஞ்சுக மலர்ந்த செஞ்சூட்டெகினத்
துருவெடுத்த கல்வான் றுருவியுங் காணாத்
தொன்மறைக்கிழவ சென்னிமற்றியானே
கண்டுகொண்ட னனிக்கடவுண்மா முடியெனப்
பெருமகிழ் சிறப்பக் குரவையிட்டார்த்த
வெள்ளெயி ரிலங்க விளைவிற் சிறைத்தென
பெருவியப் பிழைக்கு மொரிபுரை சடையை
யாள்வழக் கறுக்கும் வாளமர் தடங்கண்
மின்னிழை மருங்கிற் சின்மொழி மகளி
ரொழுகொளி மிடற்றி னழகுகவர்ந்துண்டெனக்
கயிறுகொண்டார்க்குங் காட்சித்தென்ன
மரகதங் காய்த்துப் பவளம் பழுக்குங்
கமஞ்சூர் கமுகின் கழுத்திறயாத்து
வீசொளிப் பசும்பொ னூசலாட் டயர்வார்
பருமணிக் கமுகின் பசுங்கழுத் தடைந்து
துரைபடற்குதுதித் திறடெரித் தென்ன
முழுக்குலை முரிந்து பழுக்காய் சிதறு
மங்குல்கண்படுக்கும் மதுமலர் பொதும்பர்
கங்கைசூழ் கிடந்த காசிவாணு.

புகுமேமதிக்கொழுந்தும் பொன்மாலைப்போது
நகுமே கிளையு நகைத்தா னமக்கென்னே
யுகுமே வுயிர்காசி யுத்தமனைக் காண
தருமே யப்போதிதழைத்தாரும் பெறலாமே.

---

மற்றும் சமணரிற் சித்திப்பெறவேண்டியவர்கள் அச்சாம்பலைவாரிக்கொண்டுபோய் மடத்தில்வைத்துக்கொண்டு அதன்மீது செட்டுவஸ்திரம் விரித்து தாங்கள் உழ்க்கார்ந்து ஞானசாதனமுஞ் செய்துவந்தார்கள்.

ஈதன்றி மகதநாட்டைச்சார்ந்த கபிலைநகரில் சாக்கையச் சக்கிரவர்த்தி திருமகன் பிறந்தபோது காராம்பசுவென்னும் கன்றுயீனாத பசுவொன்று வந்து குழவிக்கு அமுதூட்டிய வாட்சரியங் கண்டு கௌதமரென்னும் காரணப்பெயரும், கலிவாகுச் சக்கிரவர்த்தியால் கணிக்கப்பெற்ற சித்தார்த்தி வருஷம் வைகாசிமீ பௌர்ணமியில் பிறந்து சித்தார்த்தி யென்றும் பெயர்பெற்ற பெரியோன் பிறந்த காலவாட்சரியக் குறிப்புகளைக் கண்டும் அவரை தரிசிக்கவேண்டி தூரதேசத்தினின்று தவழ்ந்துவந்த இருசப்பாணிகளாகிய ஆனந்தன், பிருங்கியென்னும் இருவர்கள் எழுந்துநின்று நடக்க வாரம்பித்த வாட்சரியத்தைக் கண்டும், அவரது வாலவயதில் போதித்த நீதிமொழிகளின் ஆட்சரியங்களைக் கண்டும் தனது அரியமனைவி அசோதரையையும் அரிய புத்திரன் இராகுலனையும் விட்டு மாசிமாதம் பௌர்ணமியில் துறவுபூண்ட ஆட்சரியத்தைக் கண்டும், அத்தகைய துறவினிலைபால் சகல பற்றுக்களுமற்று கல்லாலடியில் வீற்று பங்குனிமாதப் பௌர்ணமியில் நிருவாண சுகநிலைபெற்று காமமென்னும் மன்மதனையும், மாரனென்னும் காலனையுஞ் செயித்து சகலமு முணர்ந்து தான் மறுபிறவிக் கேகாது பிறவி நிலையை ஜெயித்த வழிகளையும், தேக சுகயீனமடையாது பிணியை ஜெயித்த வழிகளையும், தேகந் தளராது மூப்பை ஜெயித்த வழிகளையும், பஞ்ச அவத்தைக் குள்ளாகாது மரணத்தை ஜெயித்த வழிகளையும் உலக மக்களுக்கு அநுபவக் காட்சியாகப் போதித்துவந்த ஆட்சரியங்களைக் கண்டும், உலகெங்கும் சத்தியதன்ம சங்கங்களை நாட்டி மெய்யறத்தையூட்டி, உண்மெயறியும் வழிகளைக் காட்டி நட்சேத்திரமாம் தனது புத்தேளுலகநிலை பெறுகுவதற்காக மார்கழிமாதப் பௌர்ணமியில் சுயம்பிரகாசமாகப் பரிநிருவாணமடைந்த வாட்சரியங்களைக்கண்டும்வந்தவர்களாகும் உலகமக்களுக்கு என்றுங்காணாதோர் புதுமெயும் முத்திய நிலயுமாகக் காணப்பட்டபடியால் இவரை முத்திக்கு முதல்வனென்றும், ஞானத்தின் வழிகாட்டியென்றும் உலகெங்கும் சங்கங்களை நாட்டி யறத்தைப் போதித்துள்ளபடியால் இவரை ஜகத் குருவென்றும், சக்கரவாள மெங்கணும் அறக்கதிர் விதைத்துள்ளபடியால் உலகுக்கு நீதிபோதமளித்த உலகநாதனென்றும் உலகிலுள்ள சருவசீவர்களையும் தனது தருமச் சக்கரநெறியில் நிறுத்தியவாதலின் திருமாலென்றும் அவர் பரிநிருவாண மடையும்வரையில் நரைதிரை காணாது கருணாகரமுகமும் தேஜசும் நிறைந்த வடிவாய் நின்றபடியால் திருமூர்த்தியென்றுங் கொண்டாடி அவர் பரிநிருவாணமுற்ற அயனமாம் ஆறுவது மாதத்தில் பௌத்த வாசர்களும், குடிகளும், சங்கத்தோர்களும் ஒன்றாகூடி அவர் பரிநிருவாணமுற்றப் பேரானந்த ரகசியத்தை விளங்க போதித்து பகவன் பன்றியின் இறச்சியைத் தின்றதுங்கிடையாது, அவர் பஞ்ச அவஸ்தையால் மற்றய மனு

க்களைப்போல் மரணமடைந்ததுங் கிடையாதென்று அநுபவங்களை யூட்டி அறவாழி பான் மறைவிற்குத் துக்கமடையாதீர்கள் ஆனந்தத்தில் வீற்றிருங்கோள் ததாகதர் தன் வினையை ஜெயித்து யேனையோர் வினைகளையும் ஜெயிக்கத்தக்க வழிகாட்டியிருக்கின்றார். நீங்கள் யாவரும் அவர் போதித்த வழியில்நடந்து அவரடைந்த பரிநிருவாண மடையுங்கோளென்று தென்புலத்தோராம் விவேக மிகுத்தோர்கள் கூறினார்கள்.

அவற்றைக் கேட்டிருந்த விவேகமற்றப் பெருங்குடிகளும் சில வாசர்களும் விவேகிகளின் கூற்றை மறுத்து மாமிஷ பட்சணம் என்றும் செய்யாதவரும், திடகாத்திரமும், சுகதேகியுமாயிருந்தவருக்கு பன்றியின் இறைச்சியைப் புசிக்கவைத்துக் கொன்றுவிட்டார்கள். அவரது மரணத்திற்குப் பன்றியி னிறைச்சியே காரணமாதலின் வருடந்தோரும் அவர் மரணமடைந்தநாளிற் பன்றி யெய்து பெரியாண்டவனை பூசிக்கவேண்டுமென்று ஓர் வகுப்பார் பிரிந்துகொண்டார்கள். இவர்களை ஈனயன பௌத்தர்களென் றழைக்கப்பெற்றவர்களாகும்.

மற்றுமுள்ள சங்கத்தோர்களும் விவேக மிகுத்தோர்களும் அஹிம்சா தன்மத்தை ஆதியில் ஊட்டிய அப்பனுக்கு இம்சாதுதி யேற்காது, அது சாது சங்கத்தோரைக் காக்காது, அவரை சிந்தித்து நீதிமார்க்கத்தைக் கொண்டாடவேண்டியவர்கள் அஹிம்சா தருமத்தில் நிலைத்து வைகாசிமாத பருவத்தில் அவர் பிறந்தநாள் கொண்டாட்டத்தையும், மாசிமாத பருவத்தில் அவர் துறவடைந்தநாள் கொண்டாட்டத்தையும், பங்குனிமாத பருவத்தில் அவர் நிருவாணமாம் காயனை ஜெயித்தக் கொண்டாட்டத்தையும், மார்கழிமாத பருவத்தில் அவர் சுயஞ்சோதியாய் பரிநிருவாணமுற்ற வானந்தத்தையும் கொண்டாடி நீதிநெறியில் நிலைக்கவேண்டுமென்று ஓர் கூட்டத்தார் பிரிந்தார்கள். இவர்களை மகாயன பௌத்தக் கூட்டத்தோர்களானார்கள்.

பகவன் பரிநிருவாணமுற்ற அயனமாம் ஆறுவது மாதத்திலிக்கூட்டங்கள்கூடி மேற்கூறிய முடிவுகளை செய்தபடியால் வருடந்தோரும் பன்றியை எய்யவேண்டுமென்னும் கூட்டத்தோர் யீனயன பௌத்தர்களென்றும், அவ்வகைப் பன்றி யெய்யப்படாதென்னும் கூட்டத்தோர் மகாயன பௌத்தர்களென்றும் அழைக்கப்பெற்றார்கள்.

தேவர் கோன் வாழ்க தென்புலத்தோர் வாழ்க
மூவா முதல்வன் மும்மணியும் வாழ்க
காவாது காக்குங் கருணா வுபாஸக
ராவலோர் வாழ்க வவர்சுக மோங்கவே.

—o—

## சூளாமணி.

மூவடிவினுலிரண்டுசூழ்சுடருநாண முழுதுலகமூடியெழின்மூளைவயிரகாற்றித், தூவடிவினுலிலங்குவெண்குடையினீழற்சுடரோயுன்னடிபோற்றிச் சொல்லுவதொன்றுண்டாற், சேவடிகடாமரையின் சேயிதழ்களுண்டச்சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள்பாயப், பூவடிவுகொண்டனவோ பொங்கொளிகள்சூழ்ந்து புலங்கொளாவாலெழுக்கெம் புண்ணியர்தங்கோவே.

கருமாலை வெவ்வினைகள்காறளர நூறிக்கடையிலாவொண் ஞானக்கதிர்விரித்தாயென்று, மருமாலைநன்னெறியைமுன்பயந்தா யென்றுமடியேமுன்னடிபரவுமாறறிவதல்லாற், றிருமாலேதேனாருமரவிந்தமேந்துந் திருவணங்குஞ்சேவடியாய்தேவாதிதேவ, பெருமானே நின்பெருமை நன்குணரமாட்டார்பிணங்குவார்தம்மைவினைப்பிணக்கொழிக்கலாமே.

ஒளியாகியுலகாகிநீவிரிந்தாயென்கோவுலகெலா நின்னொளியினுள்ளடங்கிற்றென்கோ, வளியாரவுலகநீயாள்கின்றாயென்கோ வமருலகுதானின்னதடியடைந்ததென்கோ, விளியாதமெய்ப்பொருளைநீவிரித்தாயென்கோ நீவிரித்தவாறேமெய்ப்பொருள்விரிந்ததென்கோ, தெளியாமலில்லைநின்றிருவடிகண்மெய்ம்மைதெளிந்தாலுஞ்செல்வனே தெரிந்துரைக்கலாமே.

களியானைநாற்கோட்டத் தொன்றுடையசெல்வன் கண்ணோராயிரமுடையான்கண்விளக்கமெய்து, மொளியானையூழிமுதலானையோங்கியுலகளவுமாகியுயிர்தமக்குறுகண்செய்யா, வளியானையாரழலஞ்சோதிவாய்சூழ்ந்தவருளாழியானையிணையடிபரவுவார்கட், கெளியானையெந்தைபெருமானையேயல்லா லிறையாகவிங்கொருவரெண்ணுமாறென்னே.

தெருளாமையால்வினைவற்பாலதொன்றுண்டு திருவடிகள்செம்பொனாரவிந்தமேந்த, விருளாழியேழுலகுஞ் சூழொளியின்மூழ்க விமையாதசெங்கண்ணினிமையோர்வந்தேத்த, வுருளாழியானுமொளிமணிமுடிமேற்கைவைத்தொருபாலில்வரவுலகநின்னுழையதாக, வருளாழி முன்செல்லப்பின்செல்வதென்னே வடிப்படாதாய்நின்றவகன்ஞாலமுண்டோ.

வானோர்தமுலகுடையமாணீலவண்ணன் மகிழ்ந்திறைஞ்சு மாலையணிமணிமுடிமேல்வைகா, வூனு நமறவாழிமேயாடைமால்யானையுடையான்றனொளிமுடியின் மேனுரைமேயாநிற்கத், தேனாருமரவிந்தஞ் சென்றேறும்போழ்து திருவடிகள்செருந்தோடுதீண்டாவேயாகி, லானுவிழ்மூவலகுமானுடையபெம்மானடியுறுவாரின்மெதாமறிவுண்டதன்றே.

தேனருளிமந்தாரச்செந்தாமந்தாழ்ந்து திரளாரைய செம்பவளம்வம்பாகலூன்றி, வானருளிமாணிக்கச்செங்கதிர்கள்வீசி மதிமருட்டும்வெண்குடையோர் மூன்றுடையவாமன், யானருளவேண்டியடியிணை பணியும்போழ்துமிமையவர்கோனாயிரச்செங்கணான்வந்து, தானருளு மாறென்று தாள்பணியும்போழ்துந் தகையொன்றதேலிறைமைதக்கதேயன்றே.

விண்டாங்குவெவ்வினைவெருஉவுதிரநூறிவிரிகின்ற மெய்ஞ்ஞானச்சுடர்விளக்குமாட்டிக், கண்டார்கணின்னிலைமைகண்டொழுகயானின்கதிர்மயங்குசோதியாற்கண்விளக்கப்பட்டுத், தண்டாஅமரைமலரின்மே னடந்தாயென்றுந்தமனீயப்பொன்னணையின் மேலமர்ந்தாயென்றும், வண்டார

சோகினிழல் வாயமர்ந்தாயென்றும் வாழ்த்தினால் வாராயோ வானவர்தங் கோவே.

கருவார்ந்தபொருணிகழ்வுங் காலங்கண்மூன்றுங் கடையிலா நன் ஞானக்கீதிரகத்தவாகி, யொருவா திங்கவ்வொளியினின் னுள்ளனாகி னுலகெல்லாநின்றுள்ளத்தேயொளிக்கவேண்டா, திருவார்ந்ததண்மார்ப தேவாதி தேவ திரளைபசெந்தளிரசோகமர்ந்தசெல்வ, வருவாரும் வையகமுநீயும் வேறாகி மணிமேனிமாலேமயக்குவதிங்கென்னோ.

செங்கணெடுமாலேசெறிந்திலங்குசோதித்திருமுயங்கு மூர்த்தியாய்செய்யதாமரையி, னங்கணடிவைத்தருளுமாதியாயாழியறவரசேயென்று நின்னடிபணிவதல்லா, லெங்கணிடரகலுமாறிந்திலேமெய்யிதி யிருளுலக நீக்குமருடருகநீயென்று, வெங்கணிருவினையையறவென்றாய் முன்னின்று விண்ணப்பஞ்செய்யும்விழுத்தகைமையுண்டோ.

சிலப்பதிகாரம்.

அறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
றரும முதல்வன் றலைவன் றருமன்
பொருளன் புனிதன் புராணன் புலவன்
சினவரன் றேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி லொளியோன்
றத்துவன் சாதுவன் (சாரணன்) காரணன்
சித்தன் பெரியவன் செம்ம றிகழொளி
யிறைவன் குரவ னியல்குண னெங்கோன்
குறைவில் புகழோன் குணப்பெருங் கோமான்
சங்கர னீசன் சயம்பு சதுமுக
னங்கம் பயந்தோ னருக னருண்முனி
பண்ணவ னெண்குணன் பாத்தில் பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன் விளங்கொளி
யோதிய வேதத் தொளியுறி னல்லது
போதார் பிறவிப் பொதியறை யோரெனச்
சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதற்
காவுந் தியுந்தன் கைதலை மேற்கொண்
டொருமூன் றவித்தோ னோதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா
காமனை வென்றோ னாயிரத் தெட்டு
நாம மல்லது நவிலா தென்னா
வைவரை வென்றோ னடியிணை யல்லது

*கைவரைக் காணினுங் காணா வென்கண்
ணருளறம் பூண்டோன் றிருமெய்க் கல்லதென்
பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தா
தருக னறவ னறிவோற் கல்லதென்
னிருகையுங் கூடி யொருவழிக் குவியா
மலர்மிசை நடந்த மலரடிக் கல்லதென்
றலைமிசை யுச்சி தானணி பொறாஅ
திறுதியி லின்பத் திறைமொழி யல்லது
மறுதா வோதியென் மனம்புடை பெயரா
தென்றவ னிசைமொழி யேத்தக் கேட்டதற்
கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தா மாறுப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து
காரணி பூம்பொழிற் காவிரிப் பேரியாறு.

எனும் பஞ்சகாவியங்களி னாதாரங்கொண்டும், பாலிபாஷையிலுள்ள
ளப் பிடகங்களி னாதாரங்கொண்டும், திராவிட பௌத்த
ருள் பிரபலமாக வழங்கிவந்த சுருதியி னனுப
வங் கொண்டும் வரைந்துள்ள
முதனூலாம்.

## புத்தரது ஆதிவேதம்

முற்றிற்று.

---

# புத்தரது ஆதிவேத விளக்கம்.

*"சப்பபாபஸ்ஸ அகரணம்"*
*"குஸலஸ்ஸ வுபசம்பதா"*
*"சசித்தபரியோதபனம்"*
*"யேதங் புத்தானுசாசனம்."*




இவ்வாக்கியங்கள் மூன்றும் மூன்று பேதமா யுள்ளபடியால் திரிபேதவாக்கியங்களென்றும், திரிவேதவாக்கியங்களென்றும், இதுவே சீர்திருத்த ஆதிபீட வாக்கியங்களானபடியால், திரிபிடகவாக்கியங்களென்றும், வரிவடிவ அட்சரமில்லாது ஒலிவடிவாய் ஒருவர் சொல்லவும் மற்றொருவர் கேட்கவுமாயிருந்தபடியால் வரையாக்கேள்வி திரிசுருதி வாக்கியங்களென்றும், விசேஷித்த ஞான மமைந்துள்ளபடியால் திரிரத்தினங்களென்றும், ஆதிமக்கள் சீர்திருத்த முப்பிரிவாக்கியங்களா யிருந்தபடியால் முதநூலென்றும், ஆதிவேதமென்றும், உடனுக்குடன் விளங்காத வரியப்பொருட்களாயிருந்தபடியால் அருமறைகளென்றும் வழங்கிவந்தார்கள்.

இம்முதநூலாம் ஆதிவேதத்தை போதித்தவர் புத்தரே
யென்பதற்கு ஆதாரம்.

நன்னூல்.

"வினையினீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதநூலாகும்.

அருங்கலச்செப்பு.

என்று முண்டாகி யிறையால் வெளிப்பட்டு
நின்றது நூலென் றுணர்.

### சீவகசிந்தாமணி.

*ஆதிவேதம் பயந்தோய்நீ யலர்பெய்மாரி யமர்ந்தோய் நீ*
*நீதிநெறியை யுணர்ந்தோய் நீ நிகரில்காட்சிக் கிறைவோய் நீ*
*நாதனென்னப் படுவோய் நீ நவைசெய்பிறவிக் கடலகத்துன்*
*பாதகமலந் தொழுவெங்கள் பசையாப்பவிழப் பணியாயே.*

### சூளாமணி.

*ஆதியங் கடவுளை யருமறை பயந்தனை*
*போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை*
*போதியங் கிழவனை பூமிசை யொதுங்கிய*
*சேதியஞ் செல்வனின் றிருவடி வணங்கினம்.*

*திரிவேதவாக்கியங்களாம் திரிபிடகவாக்கியங்கள் வரிவடிவ அட்சரங்களில்லாது வரையாக்கேள்வியாம் திரிசுருதிவாக்கியங்களா யிருந்தபடியால் மக்கள் மனதிற் சரிவரப்பதியாமல் மலைவுற்றிருப்பதையுணர்ந்த பகவன் விம்பாசரா வாசனை யணுகி மகடபாஷை யொலிவடிவா யிருந்தபடியால் சகடபாஷை வடமொழி வரிவடிவட்சரங்களையும், திராவிடபாஷையாம் தென்மொழி வரிவடிவட்சரங்களையும் உண்டுசெய்து உடலினதுச் செயலையும் உயிரினதுச்செயலையுமுணர்ந்து உண்மெயாம் மெய்ப்பொருள் உணர்வான் வேண்டி உயிரெழுத்து மெய்யெழுத்தென்னு மட்சரங்களையும் வல்லினம், மெல்லினம், இடையினமென்னு மதனதன் சத்துவங்களையும், ஒருமெய், பன்மெயென்னும் பாகுபாடுகளையும், அதனதன் வேற்றுமெகளாம் விகற்பங்களைத் தெள்ளறவிளக்கி மொழிதலாக்கி விம்பாசாரவாசனது தேசத்திலுள்ள வோர் கன்மலையை சீர்திருத்தி திரிவேதமொழிகளைத் தழுவிய தாசிலங்களாம் பாதப்பத்தை வரைந்து சகடபாஷை, திராவிடபாஷை கற்றுத்தேறும் ஒவ்வொருவர் மனதிலும் பதியச்செய்து விட்டார்.*

| | |
|---|---|
| சகட பாஷை<br>வடமொழி<br>புத்தபிரானு லிம்து பாணி<br>னியாருக்கு<br>போதிக்கப்பட்டது. | திராவிட பாஷை<br>தென்மொழி<br>புத்தபிரானு லிம்து அகஸ்<br>தியருக்குப்<br>போதிக்கப்பட்டது. |

### இவ்விருமொழியும் புத்தபிரானால் போதித்துள்ளதென்பதற் காதாரம்.

*பூர்வ மித்தேசக்குடிகள் யாவரும் புத்தபிரானை இந்திரனென்றே கொண்டாடிவந்தார்கள். அதற்குக் காரணம் மெய், வாய், கண், மூக்குச், செவியென்னும் ஐம்பிந்தியங்களை வென்ற வல்லபங் கொண்டேயாம். இந்திரவிழாவென்றும் இந்திரவிழாக்கோலென்றும், இந்திர திருவென்றும் அவரைக்கொண்டாடிவந்த வுச்சாகத்தால், அவ்வகைக் கொண்டாடிவந்த மக்*

களை இந்தியர்களென்றும், கொண்டாடிய தேசத்தை இந்தியமென்றும் நாளது வரையிலும் வழங்கிவருகின்றார்கள்.

இத்தகைய விந்திரனென்னும் பெயர்பெற்ற பகவனால் வரைந்துள்ள வரிவடிவ முதலெழுத்ததிகாரத்திற்கு, ஐந்திரவியாக்ரணமென்று பெயர். அதனாதாரங்கொண்டே "தொல்காப்பியம்" தோன்றியுள்ளதென்பதை அதற்குப் பாயிரங்கூறியுள்ள "பனம்பாரனாரே" போதுஞ்சான்றாம்.

### தொல்காப்பிய வெழுத்ததிகார சிறப்புப்பாயிரம்.

வடவேங்கட தென்குமரி - யாயிடைத்- தமிழ்கூறு நல்லுலகத்து, வழக்குஞ் செய்யுளு மாயிருமுதலி, னெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச், செந்தமிழியற்கை சிவணிய நிலத்தொடு, முந்துநூல்கண்டு முறைப் படவெண்ணி, புலந்தொகுத்தோனே போக்கறு பனுவ, னிலந்தரு திருவி ற் பாண்டியனவையத், தறங்கரைநாவி னான்மறை முற்றிய, விதங்கோட் டாசாற் கரிதபத்தெரிந்து, மயங்காமாபி னெழுத்துமுறை காட்டி, மல்குநீர்வரைப்பி னைந்திரநிறைந்த, தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்ற, பல்புகழ் நிறுத்தப் படிமையோனே.

### வீரசோழியம்.

ஆவியனைத்துங் கசதநபமவ் வரியும்வவ்வி, லேவியவெட்டும்யவ்வா றுஞான் நான்கு மெல்லாவுலகு, மேவியவெண்குடைச் செம்பியன்வீர ராசேந்திரன்றன், நாவியல் செந்தமிட் சொல்லின் மொழிமுத னன்னுதலே.

### முன்கலைதிவாகரம்.

வடநூற்கரசன் றென்றமிழ்க் கவிஞன், கவியறங்கேற்று முபயக் கவிப்புலவன், செறிகுணக்கம்பற் கிழவோன் சேந்த, னறிவு கரியாகத் தெறிசொற்றிவாகரத்து, முதலாவது தெய்வப்பெயர் தொகுதி.

### சிவஞான யோகீஸ்வரர் வடகலை தென்கலை பாணிநீயம்.

இடமுடைய முர்மொழியாந் திரிபிடக நிறைவிற்காய், வடமொழியை பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத், தொடற்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்தக், குடமுநிக்கு வற்புறுத்தார் கொல்லாற் றுபாகர்.

### வீரசோழியப் பாயிரம்.

ஆயுங் குணத்தவ லோகிதன் பக்க லகத்தியன்கேட், டேயும் புவனிக் கியம்பிய தண்டமி ழீங்குரைக்க, நீயு முளையோவெனிற் கருடன் சென்ற நீள்விசும்பி, லீயும் பறக்கு மிதற்கெனகொலோ சொல்லு மேந்திழையே.

### வீரசோழியக் கிரியாபதப்படலம்.

மதத்திற் பொலிவும் வடசொற்கிடப்புந் தமிழ்மாபு, முதத்திற் பொலியேமழசொற்களின் குற்றமு மோங்குவினைப், பதத்திற்கிளைதவு மறி

க்கே முடிக்க பன்னூறாயிரம், விதத்திற் பொலியும் புகழவலோகிதன் மெய்த்தமிழே.———அவலோகிதர்—புத்தர்.

### சிவஞானயோகீஸ்வரர் கலைஞானம்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப, இருமொழியும் வழிபடுத்தார் முனிவேந்த ரிசைபரப்பும், இருமொழியு மான்றவரே தழீஇனா ரென்றாலிவ், இருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.———முதற்குரவர் - ஆதி முனிவர், முனிவேந்தராம் முதற்றுறவியால் வடமொழியும், தென்மொழியுமாக்கியதென்பது கருத்து.

---

அவலோகிதரால் அக்கை, தங்கையர்போ லாக்கிய வடமொழி, தென்மொழி யிரண்டி னுதவால், திரிபேத வாக்கியங்களாகு முதநூலை ஆதிநூல், எழுதாக்கேள்வி, ஆரணம், ஒத்து, சாகை, சுருதி, இருக்கென்னும் ஏழுபேதமாக வழங்கிவந்தார்கள்.

### முன்கலை திவாகரம்.

ஆதிநூ லென்பது வேதநூற் பெயரே.

### பின்கலை நிகண்டு.

ஆதிநூ லெழுதாக்கேள்வி யாரண மொத்து சாகை, யேதமில் சுருதிதன்னோ டிருக்கிவை யேழும்வேதம், வேதநூற் பொருளி நாமம் விதித்திடு ஞானபாகை, யாதியாங் கருமபாகை யருத்தபாகையுமா மென்ப.




அறத்தால் கன்மபாகை நற்செயல் விளக்கத்தையும், பொருளால் அர்த்தபாகை மெய்ப்பொருள் விளக்கத்தையும், இன்பத்தால் ஞானபாகை பேரின்ப விளக்கத்தையும் விவரித்து ஞானசாதனத்தால் பற்றற்று தானே தானே தத்துவமாம் நித்தியானந்த நிருவாண வீடுபேறு பெற்றபோது பாபஞ்செய்யா திருங்கோள், நன்மெக் கடைபிடியுங்கோள், இதயத்தை சுத்திசெய்யுங்கோ ளென்னும் மூன்று பேதவாக்கியங்களின் பயனும் வீடு பேற்றையும் ஒரு பேதவாக்கியமாக்கி ஆக நான்கு பேதவாக்கியங்களென வழங்கியதுமன்றி அதனதன் செயலுக்குத்தக்கவாறு இருக்கு, யசுர், தைத்திரீயம், அதர்வணமென்னும் நான்குபெயர்களையு மளித்து அவைகளுக்கு சிறப்புநிலையாம் ஆகமம், ஆரிடம், பிடகம், தந்திரம், பனுவல், சமயம், சூத்திரமென்றும் வழங்கிவந்தார்கள்.

### பின்கலை நிகண்டு.

மெய்தெரியாரணந்தான் வேதத்தி ஞானபாகை, மையனுட் பொருளினும மற்றுப நிடதமென்ப, வைதிகம் வேதமுற்ற மார்க்கமேபார்க்குங் காலை, மையமி லிருக்கினோடு பிடகமே யாதிவேதம்.

ஏமமா மிரண்டாம்வேத மிசை தைத்திரியத்தோடு, தோமிலா யசுவமென்றுஞ் சொல்லுவர் நல்லநூலோர், சாமமா மூன்றாம்வேதந் தகமெபே ரின்பஞ் சாரும், வாமமாம் நான்காம்வேதம் அதர்வணம் வீடுபேறும்.

---

தந்துரை புனைந்துரைத்தல் சார்ந்த பாயிரத்தினோடு, முந்திய பதிகமேநூன் முகமுக வுரையுமப்பே, ரந்தமா மாகமத்தோ ராரிடம் பிடகமற்றுந், தந்திரம் பநுவலோடு சமயஞ்சூத்திரமு நூற்பேர்.

**நான்குபேதவாக்கியங்கள்.**




**நான்குபேதபாகைகள்.**




**நான்குபேதத்தின் பெயர்கள்.**




ஆதிபேதவாக்கியம் கன்மபாகை. இதன்காரணம் பாபஞ்செய்யாதிருத்தல், காரியம் மெய்ப்பொருளறிதல். இதன் பெயர் பொருட்பால், பிடகம், இருக்கென்றுங் கூறப்படும்.

இரண்டாம் பேதவாக்கியம் அர்த்தபாகை. இதன் காரணம் நன்மெய்க் கடைபிடித்தல், காரியம் மெய்யற வுணர்ச்சி. இதன் பெயர் அறத்துப்பால் தைத்திரிய மெனப்படும்.

மூன்றாம்பேதவாக்கியம் ஞானபாகை. இதன்காரணம் இதயசுத்திசெய்தல், காரியம் மெய்யின்பமாம் பேரின்ப வுணர்ச்சி. இதன் பெயர் காமப்பால் சாமமெனப்படும்.

மூன்று பேதவாக்கியங்களுக்குமேல் நான்காவது பேதவாக்கியமில்லாவிடினும் மூன்று பேதவாக்கியங்களின் சாதனங்கொண்டு விவேகமுக்திணவனுதலால் அவற்றை நிருவாணபாகையாகவும், சுயம்பிரகாச வீடுபேற்றை அதர்வண பேதவாக்கியமெனக்கூறி நான்கு பேதவாக்கியங்களென வகுத்துள்ளார்கள்.

இந்நான்கு பேதவாக்கியங்களின் அந்தரார்த்தம் சகலருக்கும் விளங்காமல் மறைபொருளாயிருந்தபடியால் ஒவ்வோர் பேதவாக்கியங்களுக்கும் எவ்வெட்டந்தரார்த்தங்களை கூறி, நாலெட்டு முப்பத்திரண்டு வுபநிட்சையார்த்தங்களை வகுத்து உபநிடதங்களென்னும் பெயரை யளித்துள்ளார்கள்.

### முன்கலைதிவாகரம்.

**உபநிடத்தின் பெயர்—உபநிடதம் வேதத்தி னுட்பொருள் நுட்பம்.**

பேதவாக்கியங்களி னுட்பொருள் சகலருக்கும் விளங்காததுகண்டே திருவள்ளுவ நாயனார் முப்பாலென்னுந் திரிக்குறளாலும் விளக்கியிருக்கின்றார்.

### நரிவெருத்தலையார்.

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச்சொன்ன முதுமொழிநூல்—மன்பதைகட்
குள்ளவரிதென்றவைவள்ளுவ ருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

### மாங்குடிமருதனார்.

ஓதற்கெளிதா யுணர்தற கரிதாகி
வேதப்பொருளாய் மிகவிளங்கி—தீதற்றோ
ருள்ளுதொறுள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

வேதவாக்கியத்தி னுட்பொருளை விளக்கு மொழிக்கு மகடபாஷையில் "உபநிடதமென்றும், சகடபாஷையில் உபநிட்சையார்த்த மென்றும், திராவிடபாஷையில் வேதத்தினுட்பொரு" ளென்றும் வழங்கிவந்தார்கள்.

### நான்கு பேதவாக்கியங்களின் 32 உட்பொருளுட்டம்.

**1. கன்மபாஷையுட்பொருளஷ்டகம். பாபமென்பதென்னை.**

1. அன்னியப் பிராணிகளின்மீது கோபங்கொண்டு துன்பஞ் செயதல் பாபம்.
2. அன்னியர்ப்பொருளை யவர்க ளனுமதியின்றி யபகரித்தல் பாபம்.
3. அன்னியரைக் கெடுக்கவேண்டுமென்று தீங்கு நினைத்தல் பாபம்.
4. அன்னியருடைய ஸ்திரீகளை யபகரித்தல் பாபம.
5. அன்னிய சீவப்பிராணிகளைக் கொலைச்செய்தல் பாபம்
6. அன்னியர் மனம் புண்பட வார்த்தை யாடுதல் பாபம்.
7. அன்னியர்களை வஞ்சித்து வருந்தச் செய்தல் பாபம்.
8 அன்னியரறிவை மதுவூட்டி மயங்கச்செய்தல் பாபம்.

**2. அர்த்தபாஷையுட்பொருளஷ்டகம். நன்மெயக்கடைபிடித்தலென்பதென்னை.**

1. அன்னியப்பிராணிகளுக் குண்டாகுந் துன்பங்களை நீக்கி யாதரித்தல் நன்மெய்.
2. அன்னியருக்கில்லாப் பொருளீய்ந்து தன்னைப்போல் சீர்பெறச் செய்தல் நன்மெய்.
3. அன்னியர்களைத் தன்னவர்போல் நேசித்து ஆசரிப்பது நன்மெய்
4. அன்னியர் மனைவிகளை தாய்தங்கையர்போல் பாதுகாத்தல் நன்மெய்.
5. அன்னிய சீவப்பிராணிகளை கொலைசெய்யாமலுங் கொலைக் கேளாமலு மிருத்தல் நன்மெய்.
6. அன்னியர் மனமும் உடலும் பூரிக்கும் மிருதுவான வார்த்தையாடுதல் நன்மெய்.
7. அன்னியர்களுக் குபயோக முண்டாகும் வார்த்தைகளைப்பேசி விருத்திபெறச்செய்தல் நன்மெய்.
8. அன்னியர்களின் அறிவைப் பெருகச்செய்து வழுதுண்ணச் செய்தல் நன்மெய்.

### 3. ஞானபாதையுட்பொருளஷ்டகம். இதயசுத்தமென்பதென்னை.

1 தன்னிடத்துண்டாங் கோபத்தை யகற்றி சாந்தத்தை நிறப்புதல் இதயசுத்தம்.
2. தன்னிடத்துண்டாங் காமத்தைத் தங்கவிடாம லகற்றி அன்பை பெருக்குத லிதயசுத்தம்.
3. தன்னிடத்துண்டாம் மயக்கங்களையகற்றி அறிவை வளரச்செய்த லிதயசுத்தம்.
4. தன்னிடத்துண்டாம் வஞ்சினம் பொருமைகளை யகற்றி சகலர் சுகவாழ்க்கையை விரும்புதல் இதயசுத்தம்.
5. தன்னிடத்துண்டாம். பொய்ப்பொருளாசையை யகற்றி மெய்ப்பொருளுசாவுதல் இதயசுத்தம்.
6. தன்னிடத்துண்டாம் சிற்றின்பச் செயல்களை யகற்றி பேரின்பத்தை நாடல் இதயசுத்தம்.
7. தன்னிடத்துண்டாம் டம்பச்செயல்களை யகற்றி அடக்கத்தில் நிற்றல் இதயசுத்தம்.
8. தன்னைவஞ்சித்துத் துன்பப்படுத்தியவனை அன்புடன் ஆதரித்தல் இதயசுத்தம்.

### 4 நிருவாணபாதையுட்பொருளஷ்டகம். வீடுபேறும் நிருவாணமென்பதென்னை.

1. தன்னிடத்துண்டாம் பற்றுக்களற்று சதானந்தத்தி லிருப்பது நிருவாணம்.
2. தன்னைமறைக்கும் நித்திரையை ஜெயித்து சதா விழிப்பிலிருப்பது நிருவாணம்.
3. தன்னை மாறிமாறி பிறக்கச்செய்யும் மரணத்தை ஜெயித்த நிலை நிருவாணம்.
4. தன்னை சதா துக்கத்திலாழ்த்தும் காமவெகுளி மயக்கங்களை யறுத்த நிலை நிருவாணம்.
5. தானே தோன்றுகிறதுங் கெடுகிறதுமாகிய மனதை தோன்றாமலுங் கெடாமலும் நிறுத்தல் நிருவாணம்.
6. தனக்குண்டாகும் ஜெநநபயம், மரணபயமற்று யாதுக்குங் கலங்காமனிற்றல் நிருவாணம்.
7. தன்னுள் தானாய் விளங்கும் உண்மையாம் பேரின்பமே நிருவாணம்.
8. தானேதானே சுயம்பிரகாச சதாநித்ய சித்தாம் ஆனந்தநிலை நிருவாணம்.

இத்தகைய பேதவாக்கிய மொன்றுக்கு எட்டு உட்பொருள் நுட்பங்களை விளக்கி நான்கு பேதவாக்கியங்களுக்கும் முப்பத்திரண்டு உபநிடதங்களாக்கி நாளதுவரையில் திராவிட பௌத்தாள் சுருதி யுக்தி யநுபவமாகவும், கேட்டல் சிந்தித்தல் தெளிதலென்னு மார்க்கமாகவும் வழங்கி வருகின்றார்கள். ஒருமொழியின்றி ஆதியில் மூன்றுமொழிகளாகத் தோன்றி அம் மூன்று மொழிகளும் மூன்று பேதமா யிருந்ததுகண்டு திரிபேதவாக்கியங்களென வழங்கி வீடுபேற்றையும், ஒருபேதவாக்கியமாகக்கொண்டபோது நான்கு பேதவாக்கியங்களென வழங்கலாயினர். இதுவே புத்தாது ஆதிவேத விளக்கமென்னப்படும்.

—:(*):—

# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 6 | 30 | மட்சி | பட்சி |
| 25 | 19 | கவிவாரு | கலிவாகு |
| 25 | 21 | எழுதிவரும் | மொழிந்துவரும் |
| 60 | 2 | சாதால் | காதால் |
| 80 | 22 | பாழாக்கிவிடுவான் | பாழாகிவிடுவான் |
| 93 | 7 | வெளிற் | வெளியில் |
| 95 | 16 | ஸ்தாணம் | ஸ்தாபனம் |
| 109 | 28 | தலைநிமிர்த்த | தலைநிமிர்ந்த |
| 117 | 6 | மதி | வமதி |
| 118 | 11 | உம்மைச் | உம்மெச் |
| 128 | 19 | பொறுமையால் | பொறுமெயால் |
| 161 | 25 | பார்த்ததுபோல் | பாராததுபோல் |
| 188 | 32 | சமயக் | சம்யக் |
| 196 | 28 | அவன் | அதன் |
| 197 | 9 | திவினை | தீவினை |
| 200 | 22 | அந்தித்திரு | அந்நித்திரு |
| 228 | 11 | மாணு | மாறு |

——( ✕ )——